# ஸ்ரீராம ரத்ன மாலா



தொகுப்பு:
எம். கே. ரங்கஸ்வாமி ஐயங்கார்





கலைமகள் காரியாலயம் சென்னை-4

ஸ்ரீ:

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின்

# ஸ்ரீராமரத்ன மாலா

தொகுத்துப் பதவுரை பொழிப்புரை

எழுதியவர்:

எம். கே. ரங்கஸ்வாமி ஐயங்கார்

ஸ்ரீ ராம ஜயம்

பங்குனி மீ 1௨

[illegible]



கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர் :: சென்னை-4.

# முகவுரை

சிறிய கூட்டமாயிருந்தாலும் பேச்சாளர், தலைவர் என்றிருப்பதுபோல், சிறு நூலாயிருந்தாலும் முகவுரை ஒன்றுவேண்டும். ஸ்ரீ எம். கே. ரங்கஸ்வாமி ஐயங்கார் சிற்பக்கலையில் முன் அதிகமாக ஈடுபாடு கொண்டிருந்தார். இப்போது இரண்டாண்டுகளாக இசைக்கலையில் ஈடுபட்டிருக்கிறார். அதிலும் ஸ்வயம் ராமபக்தர்-ராமரைப் பாடிய தியாகராஜ ஸ்வாமிகளின் பாட்டுகளில் பொழுதை நல்ல வகையில் போக்கிக்கொண்டிருக்கிறார். தியாகராஜரின் இருநூறுவது பிறப்பு விழாவையொட்டி, 'தியாகராஜ தத்வம்' என்ற சிறு நூலை எளிய விலைக்குப் போட்டுப் பிரசாரம் செய்தார். இந்த நூலிலே பல விஷயங்களைக் கொடுத்திருக்கிறார். அவ்வளவும் பாடகரும், கேட்டுச் சுவைப்போரும் அவசியம் உணரவேண்டிய விஷயங்கள்.

தியாகராஜர் தம் க்ருதிகளைப் பெரும்பாலும் தெலுங்கிலும், கொஞ்சம் ஸம்ஸ்க்ருதத்திலும் எழுதியதால் அவற்றின் பதங்களைச் சரிவர உச்சரிக்க வேண்டிய குறிப்புகள், அடிக்கடி வரும் தெலுங்கு ஸம்ஸ்க்ருதச் சொற்களும் அவற்றின் பொருளும், ஸமாஸம் அதாவது தொகைப்பதங்கள், ராமரைக் குறிக்கும் தொகை, பர்யாய பதங்கள்-இவை முதல் எட்டுப் பக்கங்களில் தரப்பட்டிருக்கின்றன.

தியாகராஜர் ராமரை இஷ்ட தைவமாய்க் கொண்டாடியதை விளக்கச் சில குறிப்பான ராம க்ருதிகள் பதவுரை பொழிப்புரைகளுடன் வழங்கப்பட்டிருக்கின்றன. கீர்த்தனங்கள் வாயிலாகத் தியாகராஜர் பல நல்லுபதேசங்களைச் செய்திருக்கிறார்.

ஓய்வு பெற்றிருக்கும்போது, இவ்வகையான தொண்டு, பகவானிடத்தில் உள்ளம் ஈடுபட்டுக்

கிடைப்பதற்கு நல்ல ஸாதனமாக ஆகிறது. ஸ்வார்த்தமாயும் பரார்த்தமாயும் ஸ்ரீ ஐயங்கார் அவர்கள் செய்யும் இத் தொண்டு ஓங்கட்டும்.

ஸ்ரீ ரங்கஸ்வாமி ஐயங்கார் தாமே எடுத்திருக்கும் கோவில் புகைப் படங்களையும் போட்டு, அடுத்ததாக தியாகராஜரின் க்ஷேத்திர கீர்த்தனங்களைச் சிறு தொகுதிகளாக வெளியிடமுயலுவார் என்று நம்புகிறேன்.

டாக்டர் வே. ராகவன்
(Dr. V. Raghavan, M.A. Ph.D.
Professor of Sanskrit,
University of Madras.)

# முன்னுரை

## ஸங்கீதமும் பக்தியும்

ஸத்குரு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் மகிமையை அறியாதவர்கள் நம் நாட்டில் இல்லை. இந்த அவதார புருஷரைப் பூஜிக்கப் பலவித உத்ஸவங்களை நடத்துகிறோம்.

ஆயினும், ஸ்ரீ தியாகப்பிரம்மத்தின் ஆத்மாவிற்குத் திருப்தி அளிக்கக் கூடியவைகளைக் காரியத்தில் காட்டுவதில்லை. அவர் தம்முடைய உன்னதமான கொள்கைகளைத் தம் கீர்த்தனங்களில் சந்தேகத்திற்கிடமில்லாமல் காட்டியிருக்கிறார். 'தெய்வபக்தியில்லாத ஸங்கீத ஞானம் பிரயோஜனமில்லை; ஸன்மார்க்கத்தில் கொண்டு விடாது (ஸங்கீதஜ்ஞாநமு பக்திவிநா ஸந்மார்கமு கலதே); பக்தியுடன் லயித்துக் கீர்த்தனம் செய்தால் முக்தி அடையலாம்' என்று பாடியுள்ளார்.

கீர்த்தனங்களை அர்த்தம் தெரிந்து தெய்வத் தியானத்துடன் பாட வேண்டும் என்பது அவருடைய உபதேசம். 'தெலிஸி ராமசிந்தநதோ நாமமு ஸேயவே' என்று வற்புறுத்தி, அப்படி ஏன் செய்யவேண்டுமென்று சரணங்களில் காட்டியுள்ளார். அர்த்தம் தெரியாமல் செய்யும் துதி பயனளிக்காது என்பது உபநிஷத் வாக்கியம். ஆகையால் கீர்த்தனங்களைப் பாடும்போது அர்த்தத்தை உணர்ந்து, இறைவனது தியானத்தில் ஈடுபட்டுப் பாடினால் அலாதி ஆனந்தம் அடையலாம்.

கீர்த்தனைகள் தெலுங்கில் இருப்பதால், அவற்றின் பொருளை அறிவது கஷ்டம் என்பது உண்மைதான். ஆனால் இறைவனுடைய குணாதிசயங்களை விஸ்தரிக்கும் போது தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய பாஷைகளிலுங்கூடச் சுலபமான வடமொழிப் பதங்களே வழங்கப்படுகின்றன. சிரத்தையுடன் சில தெலுங்குப் பதங்களின் அர்த்தத்தைத் தெரிந்துகொண்டால், கீர்த்தனங்களின் பாவம் தெரியும். உதாரணமாக, 'ப்ரோசு' என்கிற பதத்திற்குக் 'காப்பாற்று' என்று பொருள். 'ப்ரோசுடகு', 'ப்ரோவபா ரமா', 'ப்ரோசேவாரெவரு' என்னும் பதங்களிலிருந்து கீர்த்தனங்களின் முக்கியமான

பொருள்களைத் தெரிந்துகொள்ளலாம். தமிழில் பாடும் கீர்த்தனங்களிலுங்கூட, சந்தர்ப்பத்தை ஒட்டி அர்த்தத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும். 'இவர் யாரோ, என்ன பேரோ' என்கிற பாட்டை அடிக்கடி கேட்கிறோம். இதன் பொருள் என்ன என்று நான் பலரைக் கேட்டபோது அவர்கள் அநேகமாக இந்தப் பாட்டு ஸீதாபிராட்டி ராமனைப் பார்த்துப் பாடியதாகச் சொன்னார்கள். அது அப்படியல்ல என்று நிரூபிக்க, இதைப் பாடிய அருணுசலக் கவிராயரது 'ராம நாடக கீர்த்தனம்' அச்சுப் புத்தகத்தை எடுத்துக் காட்டவேண்டி வந்தது. கவிச் சக்கரவர்த்தி கம்பனை அநுசரித்து, ஸ்ரீ. ராம பிரான் ஸீதையைக் கன்னி மாடத்தில் கண்டபோது, தம்மை விட்டுப் பிரிந்த பங்கயப் பெண்ணுகிய மஹாலக்ஷ்மியாகவே உணர்ந்து ஆனந்தம் அடைகிருர். இந்தப் பாட்டின் கீழே கொடுத்திருக்கும் இரண்டாவது சரணத்தை விடாமற் பாடிஞல், இந்தச் சந்தேகத்திற்கே இடம் இராது:

பண்ணிப் பதித்தாற்போல் இரு தனமும்கூடப்
பாங்கியர்கள் இன்னமும் .... துரைத்தனமும்
எண்ணத்தாலும் வண்ணத்தாலும் .... பங்கயப்
பெண்ணைப்போற் கண்ணிற் காணும் மங்கையர்—
(ஆரோ)

கீர்த்தனங்களில் பகவானுடைய குணவிசேஷங்களைக் குறிக்கும் பல பதங்கள் வடமொழியில் இருப்பதால் இந்தத் தொகுதியில் அவை அதிகமாக உள்ள ஆறு கீர்த்தனங்களைப் பதவுரையுடன் முதலில் கொடுத்திருக்கிறேன். இவைகளை நன்ருகப் படித்துப் பாடம் செய்துவிட்டால் மற்றக் கீர்த்தனங்களின் அர்த்தத்தைச் சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். கீர்த்தனங்களின் பா⁴வத்தை உணர்ந்து சங்கீத ரஸங்களைத் தெய்வ தியானத்துடன் அநுபவிக்க வேண்டும் என்பது ஸ்வாமிகளின் நோக்கம்.

கீலக,
பங்குனி
Apl.' 69.

எம். கே. ரங்கஸ்வாமி ஐயங்கார்
சென்னை-18.

# நன்றி

நாற்பத்தைந்து வருஷங்களுக்குமுன் 'ஸ்ரீ தியாகராஜ ஹ்ருதயம்' என்ற மூன்று நூல்களைத் தயாரித்து, பக்தர்களுக்கு உதவும்படி பிரசுரம் செய்த வித்வான் ஸ்ரீ கே. வி. ஸ்ரீநிவாஸ ஐயங்காரின் ஞாபகார்த்தமாக இந்தச் சிறு நூலை அர்ப்பணம் செய்கிறேன். தியாகராஜ ஸ்வாமிகளின் ஸங்கீத ரஸத்தை மாத்திரம் அநுபவித்துவந்த வித்வான்களுக்கும் பொதுஜனங்களுக்கும் முந்நூறு கீர்த்தனங்களின் ஸ்வர விவரங்களையும் பொழிப்புரைகளையும் அவர் கொடுத்ததல்லாமல் அவைகளின் அபூர்வ தத்துவங்களையும் எடுத்துக் காட்டி, வேதம், உபநிஷதம், ராமாயணம் முதலியவைகளிலிருந்து உதாகரித்துக் கீர்த்தனங்களின் விசேஷ பக்தி ரஸத்தையும் எடுத்துக் காட்டினார். ஆயினும் இந்த அபூர்வக் கிரந்தம் மறு பதிப்பாகாததால் பிரதிகள் கிடைக்காமற் போயின.

முப்பது வருஷங்களுக்குமுன், 'அபிநவ தியாகப்பிரம்மம்' எனப் பெயர் வழங்கிய கீர்த்தனாசார்ய ஸ்ரீ ஸி. ஆர். ஸ்ரீநிவாஸ ஐயங்கார் இம்மாதிரியே பல கீர்த்தனங்களைச் 'சுதேசமித்திரன்' வாரப் பிரதிகளில் பிரசுரம் செய்திருந்தார். அவைகளும் ஒரு தனி நூலாக அமையவில்லை.

இருபது வருஷங்களுக்குமுன் கல்லூரி வீரபத்திர ராவ் என்னும் ஆந்திர தேசபக்த ரஸிகர், ஸ்வாமிகளின் எழுநூறு கீர்த்தனங்களுக்குச் சுலபமான தெலுங்கில் விளக்கம் தந்து ஒரு பெரிய நூலைப் பிரசுரம் செய்தார். இந்த அமுதமான தெலுங்கு நூலும் மறு பதிப்பில்லாமல் பிரதி கிடைப்பதே துர்லபமாகிவிட்டது.

தவிர, பத்து வருஷங்களுக்குமுன் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் பள்ளிக் காரியதரிசியாக இருந்த ஸ்ரீ ஸி. ராமாநுஜாசாரியார் நாகர லிபியில் 500 கீர்த்தனங்களையும் அவைகளின் பொழிப்புரைகளையும் ஆங்கிலத்தில் பிரசுரம் செய்தார். இந்த விசேஷமான நூலுக்கு டாக்டர் வே. ராகவன், Ph. D. அவர்கள் எழுதிய இருநூறு பக்கங்கள் அடங்கிய முன்னுரையில், ஸ்வாமிகளின் ஸங்கீத ரஸத்தையும் அதிலுள்ள பலவித தத்துவார்த்தங்களையும் நன்கு விளக்கிக் காட்டியிருக்கிறார்; இந்த முன்னுரையே ஒரு சிறந்த தனி நூலாகும். இந்த உன்னதமான பிரசுரம் சமீபத்தில் இரண்டாம் பதிப்பாக ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷனால் வெளியிடப்பெற்றிருப்பதைக் கேட்டு மகிழ்கிறேன். பலரும் இந்நூலை வாங்கிப் படித்துப் பயன் பெறலாம்.

இப்படி விசேஷப் பிரசுரங்கள் இருந்தும் ஸாமான்ய ஜனங்களுக்குப் பயன்படும்படி தமிழில் இந்தச் சிறு நூல் தொகுத்துப் பிரசார விலையாக வைத்து வழங்கப்படுகிறது. அதிக ஸங்கீத ஞானத்தையும் சாரீரத்தையும் கொடுத்து வைக்காத ஒரு பாமரன், தியாகப்பிரம்மத்தின் பக்தியில் ஈடுபட்டுச் செய்த சிறு முயற்சி இது.

'திருவரங்கம்'
ஸ்ரீராமநகர், சென்னை-18. } எம். கே. ரங்கஸ்வாமி ஐயங்கார்

# ச்லோகங்களின் உச்சரிப்பு

1. தமிழ் எழுத்துக்களில் உள்ள ஸம்ஸ்கிருத ச்லோகங்களைச் சரியாக உச்சரிப்பதற்காக, எழுத்துக்களின் பக்கத்தில் ஆங்காங்கு 2,3,4 என்ற எண்கள் தரப்பட்டுள்ளன. அதாவது, உதாரணமாக:

ஸம்ஸ்கிருதத்தில் ஒவ்வொரு வர்க்கத்திலும், மெல்லின எழுத்துக்களைத் தவிர்த்து, நான்கு எழுத்துக்கள் உண்டு. உதாரணமாக, 'க' வர்க்கத்தில், கமலம், க²லः, க³ஜः, க⁴டः என்பவை. ஆகவே 'க' வரிசையில் தமிழில் நான்கு எழுத்துக்கள் தேவையாகின்றன. இம்மாதிரியே ச, ட, த, ப எழுத்து வரிசைகளிலும் நான்கு எழுத்துக்கள் உண்டு. எழுத்துக்களைச் சற்று லேசாகவும் அழுத்தியும் உச்சரிப்பதனுல் இவை ஏற்படுகின்றன. இரண்டு மொழிகளிலும் பரிசயமுள்ளவர்களிடம் ஒரு முறை கற்றுக்கொண்டால் பிறகு சரியான உச்சரிப்புடன் படிக்கலாம்.

| ஸம்ஸ்கிருத எழுத்துக்களுக்குச் சரியான தமிழ் எழுத்துக்கள் | | | | உச்சரிப்பு | | |
|---|---|---|---|---|---|---|
| க | க² | க³ | க⁴ | க³ | ग | கங்கை |
| क | ख | ग | घ | ட³ | ड | குடம் |
| ச | ச² | ஜ¹ | ஜ² | த³ | द | பாதம் |
| च | छ | ज | झ | ப³ | ब | இன்பம் |
| ட | ட² | ட³ | ட⁴ | ரு | ऋ | எருது |
| ट | ठ | ड | ढ | ச (ஶ) | श | பாசம் |
| த | த² | த³ | த⁴ | ऽ (அ) | | தொக்கு நிற்கும் அ |
| त | थ | द | ध | | | |
| ப | ப² | ப³ | ப⁴ | | | |
| प | फ | ब | भ | | | |

2. ':' இதற்கு விஸர்க்கம் என்று பெயர். இது தனக்குப் பின்னுள்ள உயிரெழுத்தைப் பொறுத்து உச்சரிக்கப்படும் வகை:

அ:=அஹ ஆ:=ஆஹ இ:=இஹி ஈ:=ஈஹி உ:=உஹு ஊ:=ஊஹு ஏ:=ஏஹ ஐ:=ஐஹ ஓ:=ஓஹ ஔ:=ஔஹ.

மேற்கண்ட விஷயங்களை நன்கு புரிந்துகொண்டபின், ச்லோகங்களைச் சரியாக உச்சரித்துப் படிக்கலாம்.

# கீர்த்தனங்களில் பத உச்சரிப்பு

ஸம்ஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம் முதலிய பாஷைகளில் "க, ச, ட, த, ப" என்ற எழுத்துக்கள் நான்கு விதமாக உச்சரிக்கப்படுகின்றன. உதாரணமாகக் கமலம் (தாமரை) க²ல: (போக்கிரி), க³ஜ: (யானை), க⁴ட: (குடம்). இவ்விதம் வேறுபடும் உச்சரிப்புக்களைத் தெரிந்துகொண்டு படிக்கவேண்டும். குரு என்பதன் பொருள் "செய்"; கு³ரு என்றால் "ஆசான்".

முன்பு வடமொழி நூல்களைத் தமிழில் எழுதத் தமிழ் எழுத்துக்கள் போல் சில எழுத்துக்களைக் கொண்டு "கிரந்த லிபி"யில் இதிஹாஸ புராணங்கள் முதலியவற்றை அச்சிட்டு வழங்கி வந்தனர். இவை கடந்த அறுபது வருஷங்களில் வழக்கற்றுப் போகலாயின. ஆனால், தமிழ் எழுத்துக்களுக்குப் பக்கத்தில் ஆங்காங்கு 2, 3, 4 சேர்த்துவிட்டால் அவைகளைச் சரியாக உச்சரிக்க முடியும். இரண்டு மொழிகளிலும் பரிசயம் உள்ளவர்களிடம் உச்சரிப்பைக் கற்றுக்கொண்டால் சரியாகப் படிக்கலாம். இதைக் கற்பது மிகவும் அவசியம். இதை நன்றாகத் தெரிந்துகொண்டு இந்நூலைப் படிப்பது பயனளிக்கும்.

தவிர வடமொழியில் உள்ள சில எழுத்துக்களைத் தமிழில் சேர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஸ்ரீ, ஜ, ஷ, ஸ, ஹ, க்ஷ என்பவைகளை எழுதக் கற்றுக் கொள்ளவேண்டும். " : "-இப்படிக் குறிப்பதற்கு விஸர்கம் எனப் பெயர். இது தனக்குப் பின்னுள்ள உயிரெழுத்தைப் பொறுத்து உச்சரிக்கப்படும் வகை:— அ:— அஹ, இ:-இஹி, உ:-உஹு, ஏ:-ஏஹெ, ஐ:-ஐஹி, ஓ:- ஓஹொ, ஔ:-ஔஹு.

தெலுங்கு மொழியில் 'ந' என்ற எழுத்து ஒன்றே. எனவே, கீர்த்தனங்களில் தகர நகரமே சங்கீத நூல்களில் உபயோகிக்கப்பட்டு வருகிறது.

ஸங்கீதம் கற்பவர்கள், கீர்த்தனங்களைத் தமிழில் எழுதக் கற்றுக்கொள்வதில் சில குறைகள் ஏற்படுகின்றன. நாகர எழுத்துக்களிலாவது, எண்கள் போட்ட தமிழிலாவது, எழுதிச் சரியான உச்சரிப்புடன் படித்துப் பாடம் பண்ணவேண்டும். உதாரணமாக; "விஹார" விளையாடுகிறவன்; இதைத் தமிழில் எழுதினால் விகார என வரும். பா⁴வம் என்பது விசேஷமான பொருளுக்கு

உபயோகப்படும். உச்சரிப்பு எண் இல்லாமல் படித்தால், பாவமாகிவிடும். பிழைகளுடன் பாடமாகிவிட்டால் பிறகு திருத்திப் பாடுவது சிரமம்.

உதாரணமாகக் ''கத்தந வாரிகி'' என்கிற சிறந்த கீர்த்தனத்தில், நித்திரையைத் தள்ளிவிட்டு என்ற பொருளுள்ள ''நித்துரா நிராகரிஞ்சி'' என்பதை ''நீதுரானீ-ராகரிஞ்சி'' என்ற பாடமாய்ப் பாடுகிறார்கள்.

வடமொழியில் எட்டாம் வேற்றுமை (ஸம்போதந) பதங்கள், தமிழில் ''ராமா'', ''கிருஷ்ணா'' என்று வருவதுபோல் நெடில் முடிவு வராமல் ''ராம, கிருஷ்ண'' எனக் குறில் வடிவு கொண்டு வரும். இந்தப் பதங்கள் உரிச் சொல்லாகவும் வரும். உதாரணமாக, ''ஸக்கநி ராஜமார்கமு'' பாடும்போது ராஜா என்று நீட்டிப் பாடுவது சரியல்ல.

## கீர்த்தனங்களின் பா⁴வம்

கீர்த்தனங்களின் அர்த்தத்தைப் பூர்த்தியாகத் தெரிந்துகொள்ளாவிட்டாலும், அவைகளின் முக்கியக் கருத்தையும், அவை எந்த ஸ்தலத்தையோ, தெய்வத்தையோ பாடினவென்பதையும் தெரிந்துகொள்வது அவசியம்.

பல வருஷங்களுக்குமுன், காஞ்சியில் ஒரு பாட்டுக் கச்சேரி நடக்கும்போது, அந்த ஸ்தலத்தில் பிரசித்தமான காமாக்ஷியைப்பற்றிப் பாடும்படி வித்வானைக் கேட்டுக்கொண்டார்கள். அவர் தமக்குப் பாடமில்லை என்று வேறு ஒன்றைப் பாடி முடித்தார். பிறகு அவரிடம், ''விநாயகுநி'' என்கிற கீர்த்தனத்தைப் பாடியிருக்கலாமே'' என்று சொன்னேன். ''அது விநாயகனைப் பற்றி அல்லவா?'' என்றார். ''அது காமாக்ஷி அம்மனைப் பாடியது. விநாயகனைப்போல் என்னைக் காப்பாற்று என்பது பொருள்'' என்றேன். அவர் தமது வருத்தத்தைத் தெரிவித்தார்.

ஸ்வாமிகள் ஸ்ரீ ராமபிரான் தயை கிட்டவில்லையே என வருந்திப் பாடிய ''எந்துகு நிர்தய'' என்கிற கீர்த்தனத்தை ஒரு வித்வான், ''எந்துகு நீதயா'' என்று பல முறை பாடினார்- ''உன் தயை எனக்கெதற்கு?'' என்ற பொருள்பட! ஓர் அக்ஷரம் விட்டாலும் அர்த்தம் மாறிவிடும். ஒரு பாட்டு உபாத்தியாயர், ''ஸ்மரணே

ஸுகம்'' என்கிற கீர்த்தனத்தை முதல் எழுத்து த்வனிக்காமல். சொல்லிக் கொடுத்ததைக் கேட்டிருக்கிறேன். ''ஜகதோத்தாரண'' என்கிற புரந்தர ஸ்வாமிகளின் பாட்டு, ஸங்கீத ரஸமும், அர்த்த விசேஷமுமுள்ளது. ஜகத்தை எல்லாம் தாங்கும் பரமாத்மா ஒரு குழந்தையாகக் கோகுலம் சேர்ந்து யசோதையால் ஆட்டப்பட்டானே என்னும் விசித்திரத்தைப் பாடியது. இதை ''ய'' எழுத்தை விட்டுவிட்டு, ''சோதா'' ''சோதா'', என்று திரும்பத் திரும்பப் பாடுவதைக் கேட்கிறோம்.

தவிர, கீர்த்தனங்களின் கருத்தையறிந்து சரியான சந்தர்ப்பத்தில் பாட வேண்டும். ஒரு விஷ்ணு கோயிலில் இரவில் ஏகாந்த ஸேவைக் கச்சேரியில் பாடகர், ''சிவ தீக்ஷா பருவாடநுரா'' என்கிற பாட்டைப் பாடினார். ''நான் சிவ தீக்ஷையுள்ளவன்: ஸ்ரீ வைஷ்ணவனென்றால் எனக்கு ஆகாது. அவனுடன் நான் சேரமாட்டேன்'' என்கிற பொருள் கொண்டது. ரஸமான பாட்டாயினும் விரஸமான பொருள் கொண்டது.

அநேகமாகக் கீர்த்தனங்களின் பல்லவி பதங்களிலேயே அவைகளின் முக்கியக் கருத்து விளங்கும். அதிகமாக உபயோகப்படும் தெலுங்கு, வடமொழிப் பதங்களையும், அவைகளின் அர்த்தத்தையும் கீழே கொடுத்திருக்கிறேன்:

## தெலுங்குப் பதங்கள்

(நேநு) நான், (நீவு) நீ, (நீவே) நீயே, (மா) என்னுடைய, (நிந்நு) உன்னை, (நீகே) உனக்கே, (எருகே) தெரிய, (சூபு) காட்டு.

(பலுக) பேச, (விநு) கேள், (தெலிசி) தெரிந்து, (பிலசி) கூப்பிட்டு, (ஒஸகு) கொடு, (ராது) வராது, (இச்சி) கொடுத்து, (ஆட) பேச, (சூட) பார்க்க, (லேக) இல்லாத, (மாட) வார்த்தை, (மாடலாட) வார்த்தை பேச, (ம்ரொக்க) வணங்க, (மொரலிட) முறையிட, (கநி) பார்த்து, (ஏலு) காப்பாற்று, (தலசி) நினைத்து, (வேடுகொந்) வேண்டிக்கொள், (வெடல) புறப்பட, (வலசி) ஆசை கொண்டு, (லேகநா, லேகயா) இல்லாமலா.

## வடமொழிப் பதங்கள்

(மாருதி) வாயு பகவான், (ரமா) லக்ஷ்மி, (ஸரஸிஜ) தாமரை, (ஶ்ரியம்) ஸம்பத், (முதம்) களிப்பு, (மாம்) என்னை, (அஹம்) நான், (மம) என்னுடைய, (பாஹி, ரக்ஷ, பாலய, பரிபாலய) என்னும் பதங்களுக்குக் காப்பாற்று என்று பொருள்.

(அவது, ரக்ஷது) காப்பாற்றட்டும், (தேஹி) கொடு, (பஶ்ய) பார், (ஶ்ருணு) கேள், (சிந்தய) நினை, (நமாமி, வந்தே) நமஸ்காரம் செய்கிறேன், (வதாமி) சொல்லுகிறேன், (சிந்தயாமி) நினைக்கிறேன், (பா[4]வயாமி துதிக்கிறேன், (நுத) துதிக்கப்பட்ட, (ஸந்நுத) நன்றாய்த் துதிக்கப்பட்ட, (வத[3]ந) முகம், (நயந, லோசந, அக்ஷ) கண், வந்தே[3]+அஹம்=வந்தே[3]ஹம்; (ஶ்யாம) கறுத்த, (ஸததம்) எப்பொழுதும், (மாம்+அவ=மாமவ) என்னைக் காப்பாற்று. (மாம்+அவது=மாமவது); நம:+அஹம்= நமோஹம்; (மனஸா) மனத்தினால், (ப[4]ஜ) பஜனை செய், (ப[4]ஜேஹம்) நான் பஜிக்கிறேன்.

## ஸ்வாமிகளின் கீர்த்தனங்கள்

ஸம்ஸ்க்ருத பதங்களின் பொருளைக் கொண்டே கீழே கொடுத்திருக்கும் கீர்த்தனங்களின் அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளலாம்.

| | |
|---|---|
| மாமவஸததம் ரகு[4]ராம | ஜகந்மோஹிநி ஆதி |
| மாமவ ரகு[4]ராம மரகதமணிஶ்யாம-ஸாரங்க | ரூபகம் |
| பாஹி கல்யாண ராம | காபி ஆதி |
| பாஹி கல்யாண ஸுந்த[3]ர | புந்நாகவராளி |
| பாஹி மாம் ராம சந்த்[3]ர | காபி ஜம்ப |
| பாஹி ராமதூ[3]த ஜகத்ப்ராண குமார (வாயுகுமார) | வஸந்தவராளி ரூபகம் |

## இதர கீர்த்தனங்கள்

| | |
|---|---|
| பாஹி மாம் ரமாரமண | வராளி ஆதி |
| ஶிவே பாஹி மாம் (ஶிவே-பார்வதி) | கல்யாணி ஆதி |
| மஹா க[3]ணபதி: அவது மாம் | தோடி ரூபகம் |
| ஸ்ரீ வேணுகோ[3]பால ஶ்ரியம் தே[3]ஹி | |
| மரகதவல்லிம் மநஸா ஸ்மராமி | காம்போதி ஆதி |
| மீனாக்ஷி மே முத[3]ம் தே[3]ஹி | கமகக்ரிய ஆதி |
| மாமவ பட்டாபி[4]ராம | மணிரங்கு |

ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யாய நமஸ்தே காம்போதி ரூபகம்
வாதாபி க³ணபதிம் ப⁴ஜேஹம் ஹம்ஸத்வநி ஆதி
ஸ்ரீ வேணுகோ³பால ஸ்ரீருக்மிணிலோல குறிஞ்ஜி ஜம்ப

வீர ஹநுமதே நமோ நம:
மாருதி தநயே நமோ நம: காபி ரூபகம்
பா³லகிருஷ்ணம் பா⁴வயாமி-கோபிகாவஸந்தம் ஆதி
பர்வத ராஜகுமாரி பார்வதி பாஹிமாம் ஸ்ரீரஞ்ஜநி ஆதி
ஸ்ரீ ஸரஸ்வதி நமோஸ்துதே ஆரபி ரூபகம்
சிந்தய மாகந்தமூல கந்த³ம் பைரவி ரூபகம்
('மாகந்தமூல'—மாமரத்தடியிலுள்ள லிங்கம்)
மாமவது ஸ்ரீ ஸரஸ்வதி ஹிந்தோளம் ஆதி
ஸாரஸாக்ஷ பரிபாலயமாம் காமவர்த்திநி ஆதி
பா⁴வயாமி ரகு⁴ராமம் ப⁴வ்ய ஸுகுணராமம் ராகமாலிகை ரூபகம்
ஸரஸிஜ நாப⁴ முராரே தோடி மிஶ்ரசாபு
க்ருபயா பாலய ஶௌரே சாருகேஶி மிஶ்ரசாபு
ஸ்ரீரங்க³புர விஹார ஜயகோத³ண்டா³வதார ஸ்ரீராம....

## ஸமாஸ பதங்கள்

தமிழில் தொகைப் பதங்கள்போல் வடமொழியில் பதங்களின் சேர்க்கை 'ஸமாஸ பதம்' எனப்படும்.

(கி³ரிராஜ ஸுதா தநய) பர்வதராஜனின் குமாரியின் மகன் விநாயகர்.

(பத்³மம், கமலம்) தாமரை; பத்³மாஸநி, பத்³ம ப்ரிய, பத்³மஹஸ்த, பத்³மநாப⁴ப்ரிய, கமலலோசந, கமலநயந.

(நேத்ர, நயந, லோசந, அக்ஷ) கண்; ராஜீவ நேத்ர, பத்³மாக்ஷ, கமல லோசந.

(வத³ந) முகம்; (கமநீயவத³ந) அழகிய முகமுள்ள வனே.

(அங்க³) தேகம்; (மத³ந ஸுந்த³ராங்க³) மன்மதனைப் போல் அழகிய தேகமுள்ளவனே; (இந்து³) சந்திரன்.

(இந்து³ நிபா⁴நந) சந்திரனைப்போல் முகமுள்ள வனே.

(கருணாநிதி⁴) (கா்ருண்யஜலநிதி⁴) கருணைக்கடல்.

(பாபவிமோசந) பாபங்களைப் போக்குபவனே.

(சரணாக³தவத்ஸல) சரணமடைந்தவர்களிடம் அன்பையளிப்பவனே.

(ப்ரணதார்த்திஹர) ப்ரணாமம் செய்பவர்களின் கஷ்டத்தைத் தீர்ப்பவனே; (தீ³நஶரண்ய) எளியோர்களுக்கு அடைக்கலமே; (ஶ்ரிதஜநபோஷண) ஆசிரயித்தவர்களைக் காப்பாற்றுபவனே.

(தீ³நபந்து⁴) தீனர்களுக்குப் பந்துவாயிருப்பவனே.

(நக³ராஜத⁴ர) பர்வதத்தைத் தாங்கியவனே.

(விநதாஸுத வாஹந) விநதையின் மகனை (கருடனை) வாஹனமாகக் கொண்டவனே; (ஆத்³யந்தரஹித) ஆதியும், முடிவும் இல்லாதவனே; (அநந்த) அளவில் அடங்காதவனே.

## ஸம்ஸ்க்ருத கீர்த்தனங்கள்

ஸ்ரீராமபிரானைக் குறிக்கும் பதங்கள்: ரகு⁴வீர, ரணதீ⁴ர, தஶ³ரத²குமார, ஸீதாநாயக, ஸீதாகாந்த, ஸீதாபதி, ஸீதா ரமண, ஸீதாமநோஹர, க்ஷிதிஜாரமண, ஜானகீகாந்த, ஜானகீப்ராணநாத², ரகு⁴வரபுத்ர.

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் கீர்த்தனங்களில், இனிமையான ஸம்ஸ்க்ருத ஸமாஸ பதங்களால் ஸ்ரீ ராமபிரானின் குண விசேஷங்களை வர்ணித்து, என்னைக் காப்பாற்று (மாம்பாஹி, மாம் பாலய, மாமவ) என்று பிரார்த்திக்கும் கீர்த்தனங்களை முதலில் காணலாம். பஞ்சரத்ன கீர்த்தனங்களில் முதலாவதான ''ஜகதாநந்தகாரக'' என்பதை அடுத்தபடியாகக் கொடுத்திருக்கிறேன். இதில் ஒருவிதப் பிரார்த்தனைப் பதமும் இல்லை. ஸ்வாமிகளுக்குப் பகவானை வர்ணிப்பதிலேயே ஆனந்தமும் ஸுகானுபவமும் உண்டாகின்றன போலும்!

''....அச்சுதா அமரர் ஏறே ஆயர்தம் கொழுந்தே என்னும் இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்......'' என்றபடி.

## ஜாநகீரமண

ராகம்: சுத்தஸீமந்தினி] [தாளம்: ஆதி

இந்தக் கீர்த்தனத்தில் ராமபிரானின் குண வைபவங்களைப் போற்றி, ''காப்பாற்று'' (பாஹி) என்று பிரார்த்திக்கிறார்.

ப. ஜாநகீரமண ப$^{4}$க்த பாரிஜாத
பாஹி ஸகலலோக ஶரண

அ. கா$^{3}$நலோல க$^{4}$நதமால நீல
கருணாலவால ஸுகு$^{3}$ண ஶீல

ச. ரக்தநளிநத$^{3}$ள நயந ந்ருபால
ரமணீயாநந முகுர கபோல
ப$^{4}$க்திஹீநஜந மத$^{3}$க$^{3}$ஜ ஜால
பஞ்சவத$^{3}$ந த்யாக$^{3}$ராஜ பால

### பதவுரை:

(ஜாநகி ரமண) ஜானகி மணவாளனே, (பக்த பாரிஜாத) பக்தர்களுக்குக் கற்பக விருக்ஷம் போன்றவனே, (ஸகல லோக ஶரண) எல்லா ஜீவராசிகளுக்கும் அடைக்கலமானவனே, (கானலோல) ஸங்கீதத்தில் ஆனந்தப்படுவோனே, (கந தமால நீல) மிகவும் கறுப்பான மாவிலங்கத்தின் நிறமுள்ளவனே, (கருணாலவால) கருணைக்கடலே, (ஸுகுணஶீல) ஸத்குண சீலனே, (பாஹி) காப்பாற்றுவாய்.

(ரக்த நளிந தளநயந) செந்தாமரைக் கண்ணனே, (ந்ருபால) ஜனங்களைக் காப்பாற்றுபவனே, (ரமணீயாநந) அழகிய முகத்தையுடையவனே, (முகுர கபோல) கண்ணாடியைப் போன்ற கன்னங்களையுடையவனே, (பக்தி ஹீந) பக்தியில்லாத, (ஜந) ஜனங்களான, (மதகஜ ஜால) மதம் பிடித்த யானைகளின் கூட்டத்திற்கு, (பஞ்சவதந) ஸிம்ஹம் போன்றவனே, (த்யாகராஜ பால) த்யாகராஜனை ரக்ஷிக்கிறவனே.

## ஸாமஜவரக³மந

ராகம்: ஹிந்தோளம்] [தாளம்: ஆதி

இந்தக் கீர்த்தனத்தில் ''மாம் பாலய'' (என்னைக் காப்பாற்று) என்று பிரார்த்திக்கிறார்.

ப. ஸாமஜவர க³மந ஸாது⁴ஹ்ருத்
ஸாரஸாப்³ஜ பால காலாதீத விக்²யாத

அ. ஸாமநிக³மஜ ஸுதா⁴மய கா³ந விசக்ஷண
குணஶீல த³யாலவால மாம் பாலய

ச. வேதஶிரோமாத்ருஜ ஸப்தஸ்வர
நாதா³சலதீ³ப ஸ்வீக்ருத
யாத³வகுல முரளீவாத³ந வி
நோத³ மோஹநகர த்யாக³ராஜ வந்த³நீய

### பதவுரை:

(ஸாமஜ வரகமந) உத்தம ஜாதி யானையைப்போல் நடப்பவனே, (ஸாது ஹ்ருத் ஸாரஸ அப்ஜபால) ஸாதுக்கள் ஹ்ருதயத் தாமரையை மலரச் செய்பவனே, (கால அதீத) காலத்தைக் கடந்தவனே, (விக்யாத) புகழ் பெற்றவனே, (ஸாம நிகமஜ ஸுதாமய காந விசக்ஷண) ஸாமவேத அம்ருத மய கானத்தில் நிபுணனே, (குணஶீல) உத்தம குணங்களுள்ளவனே, (தயால ஆலவால) கருணையின் பாத்தியே, (வேத ஶிரோமாத்ருஜ) வேதத்தின் சிரஸிலிருந்து, (ப்ரணவம்) உண்டான, (ஸப்த ஸ்வர நாத) ஏழு ஸ்வரங்களின் நாதஸ்வரூபனே, (அசல தீப) அசைவற்ற தீபமே, (ஸ்வீக்ருத யாதவகுல) யாதவ குலத்தில் அவதரித்தவனே, (முரளீ வாதந விநோத) வேணு கானத்தில் பிரியமுள்ளவனே, (மோஹநகர) ஜகத்தை மயங்கச் செய்பவனே, (த்யாகராஜ வந்தநீய) த்யாகராஜன் நமஸ்கரிப்பவனே, (மாம் பாலய) என்னை ரக்ஷிக்கவேண்டும்.

## நிரவதி⁴ஸுக²த³

ராகம்: ரவிசந்த்ரிகா] [தாளம்: ஆதி

இதில் ''மாமவ'' (என்னைக் காப்பாற்று) என்று பிரார்த்திக்கிறார்.

ப. நிரவதி[4] ஸுக[2]த[3] நிர்மலரூப நிர்ஜிதமுநிஶாப (நிர)

அ. ஶரதி[4] ப[3]ம்த[4]ந நதஸம்க்ரம்த[2]ந
ஶம்கராதி[3] கீ[3]யமாந ஸாது[4]ஜந ஸுஸத[3]ந (நிர)

ச. மாமவ மரகதமணிநிப[4] தே[3]ஹ
ஶ்ரீரமணி லோல ஶ்ரிதஜநபால
பீ[4]மபராக்ரம பீ[4]மகரார்சித
தாமஸ ராஜஸ மாநவதூ[3]ர த்யாக[3]ராஜ விநுதசரண (நிர)

**பதவுரை:**

(நிரவதிஸுகத) அளவிறந்த சுகத்தைக் கொடுப்பவனே, (நிர்மல ரூப) மலினமில்லாத உருவமுடையவனே, (நிர்ஜிதமுநிஶாப) முனிசாபம் வென்றவனே, (ஶரதி பம்தந) சமுத்திரத்தில் அணையிட்டவனே, (நதஸம்க்ரம்தந) இந்திரனால் வணங்கப்பட்டவனே, (ஶம்கராதி கீயமான) சங்கரன் முதலியவர்களால் கொண்டாடப்பட்டவனே, (ஸாது) ஸாதுத்தன்மையுடைய, (ஜந) பெரியோர்களின், (ஸுஸதந) நல்ல வீடாக உடையவனே, (மரகதமணிநிபதேஹ) பச்சைக் கல்லைப் போன்ற சரீரகாந்தியையுடையவனே, (ஶ்ரீ ரமணிலோல) இலக்குமியோடு விஹரிப்பவனே, (ஶ்ரிதஜநபால) ஆஶ்ரிதர்களைக் காப்பாற்றுபவனே, (பீமபராக்ரம) மிக்க பராக்கிரமமுடையவனே, (பீம கரார்சித) சிவனால் பூஜிக்கப்பட்டவனே, (தாமஸராஜஸ மாநவதூர) தமோகுண ரஜோகுணமுடைய மனிதர்கட்குத் தூரத்திலிருப்பவனே, (த்யாகராஜ விநுதசரண) தியாகராஜனால் துதிக்கப்பட்ட பாதங்களையுடையவனே, (மாம் அவ) என்னைக் காப்பாற்றுவாய்.

## ஸுஜநஜீவந

ராகம்: கமாஸ்] [தாளம்: ரூபகம்

இந்தக் கீர்த்தனத்திலும் "மாமவ" (என்னைக் காப்பாற்று) என்று பிரார்த்திக்கிறார்.

ப. ஸுஜநஜீவந ஸுகு[3]ணபூ[4]ஷண ராம (ஸு)

அ. பு[4]ஜக[3] பூ[3]ஷணார்சித பு[3]த[3]ஜநாவநா
த்மஜ வந்தி[3]த ஶ்ரித சந்த[3]ந த[3]ஶதுரங்க மாமவ(ஸு)

ச. சாரு நேத்ர ஸ்ரீகளத்ர ஸ்ரீரம்யகா3த்ர
தாரகநாம ஸுசரித்ர த3ஶரத2 புத்ர
தாரகாதி4 பாநந த4ர்ம பாலக
தாரய ரகு4வர நிர்மல த்யாக3ராஜ ஸந்நுத (ஸு)

பதவுரை:

(ஸுஜந ஜீவந) நல்லவர்களுக்கு ஜீவனமாக இருப்பவனே, (ஸுகுண பூஷண) நல்ல குணங்களால் அலங்கரிக்கப்பட்டவனே, (புஜக பூஷணார்ச்சித) பரமசிவனால் பூஜிக்கப்பட்டவனே, (புதஜநாவந) அறிஞர்களைக் காப்பாற்றுபவனே, (அஜவந்தித) பிரம்மனால் ஸேவிக்கப்பட்டவனே, (ஶரித சந்தந) அண்டினவர்களுக்குக் குளிர்ச்சியை உண்டாக்குபவனே, (தஶதுரங்க) கருடனை வாஹனமாக உடையவனே, (மாமவ)....

(சாருநேத்ர) அழகான கண்களையுடையவனே, (ஸ்ரீகளத்ர) லக்ஷ்மிநாதனே, (தாரகநாம) மோக்ஷத்தை அளிக்கக்கூடிய ராம நாமத்தை உடையவனே, (ஸுசரித்ர) புண்ணியமான சரித்திரத்தை உடையவனே, (தாரகாதிபாநந) சந்திரனைப் போல் முகம் உள்ளவனே, (தாரய) என்னைக் காப்பாற்று, (நிர்மல) சுத்தமூர்த்தியே, (த்யாகராஜ ஸந்நுத)....

## ரகு4வீர

ராகம்: ஹுஸேநி] [தாளம்: ரூபகம்

இந்தக் கீர்த்தனத்தில் ஸ்ரீ ராமபிரானைப் போற்றி, "ராரா" (வா அப்பா) என்று பிரார்த்திக்கிறார்.

ப. ரகு4வீர ரணதீ4ர ராரா ராஜகுமார

அ. ப்3ருகு3 ஸூநுமத3விதா3ர ப்3ருந்தா3ரகாதா4ர

ச. ராவண க4டகர்ண ப3லா—ராதி ரிபு நக3நகா3ரி
ஸ்தா2வர ஜங்கம ரூப த்யாக3ராஜ ஹ்ருச்சாரி

பதவுரை:

(ரகுவீர) ரகுவம்சத்தில் வீரனே, (ரணதீர) போர்க்களத்தில் தைரியமுடைய, (ராஜகுமார) சக்ரவர்த்தித் திருமகனே, (ராரா).... (ப்ருகுஸூநு) பரசுராமனுடைய, (மத) மதத்தை, (விதார) போக்கடித்தவனே,

(ப்ருந்தாரகாதார) தேவதேவனே, (ராவண) ராவணன், (கடகர்ண) கும்பகர்ணன், (பலாராதி ரிபு) இந்திரஜித்தன் என்கிற, (நக) மலைகட்கு, (நகாரி) இந்திரனைப் போன்றவனே, (ஸ்தாவர ரூப) அசையாப் பொருள், (ஜங்கம) அசையும் பொருள் இவற்றின், (ரூப) உருவத்தையுடையவனே, (த்யாகராஜ ஹ்ருச்சாரி) தியாகராஜனுடைய மனத்தில் சஞ்சரிப்பவனே.

## ஜகதா$^3$நந்த$^3$காரக

ராகம்: நாட] [தாளம்: ஆதி

ப: ஜக$^3$தா$^3$நந்த$^3$ காரக
ஜயஜாநகீ ப்ராண நாயக

அ: க$^3$க$^3$நாதி$^4$ப ஸத்குலஜ
ராஜ ராஜேஶ்வரா
ஸுகு$^3$ணாகர ஸுரஸேவ்ய
ப$^4$வ்யதா$^3$யக ஸதா$^3$ ஸகல

ச: 1: அமரதாரக நிசயகுமுத$^3$ஹித
பரிபூர்ண நக$^3$ஸுரஸுபூ$^4$ஜ
த$^3$தி$^4$பயோதி$^4$வாஸ ஹரண
ஸுந்த$^3$ரதரவத$^3$ந ஸுதா$^4$மய
வசோப்$^3$ருந்த$^3$ கோவிந்த$^3$ஸாநந்த$^3$
மாவரா ஜராப்த ஶுப$^4$கராநேக (ஜக)

2: நிக$^3$ம நீரஜாம்ருத போஷக
நிமிஷவைரி வாரித$^3$ ஸமீரண
க$^2$க$^3$துரங்க ஸத்கவி ஹ்ருத$^3$லயா
க$^3$ணித வாநராதி$^4$ப நதாங்க்$^4$ரியுக$^3$ (ஜக)

3: இந்த்$^3$ர நீலமணி ஸந்நிபா$^4$பக$^4$ந
சந்த்$^3$ர ஸூர்ய நயநாப்ரமேயவா
கீ$^3$ந்த்$^3$ரஜநக ஸகலேஶ ஶுப்$^4$ரநா
கே$^3$ந்த்$^3$ரஶயந ஶமநவைரிஸந்நுத (ஜக)

4. பாத3விஜித மௌனிஶாப ஸவபரி
பால வரமந்த்ர க்3ரஹணலோல
பரமஶாந்தசித்த ஜநகஜாதி4ப
ஸரோஜப4வ வரதா3கி2ல (ஜக)

5. ஸ்ருஷ்டிஸ்தி2த்யந்த காரக அமித
காமித ப2லத3 (அ)ஸமாநகா3த்ர ஶ
சீபதிநுதா3ப்தி4மத3ஹரா நுராக3
ராஜிதகதா2 ஸாரஹித (ஜக)

6. ஸஜ்ஜநமாநஸாப்3தி4ஸுதா4கர கு
ஸுமவிமாந ஸுரஸாரிபு கராப்3ஜ
லாலித சரண குணு ஸுரக3ண
மத3ஹரண ஸநாதநாஜநுத (ஜக)

7. கரத்4ருத ஶரஜாலாஸுரம தா3ப
ஹரணவநி ஸுராவந
கவீந பி3லஜ மௌநிக்ருத சரித்ர
ஸந்முக2 ஸ்ரீத்யாக3ராஜநுத (ஜக)

8. புராணபுருஷந்ருவராத்மஜா
ஶ்ரிதபராதீ4நகர விராத4 ராவண
விராவணநக4 பராஶர மநோ
ஹராவிக்ருத த்யாக3ராஜ ஸந்நுத (ஜக)

9. ஓம்காரபஞ்ஜரகீர புர
ஹரஸரோஜப4வ கேஶவாதி3
ரூபவாஸவரிபு ஜநகாந்தக கலா
த4ர களாத4 ராப்தக்3ருணகர ஶ
ரணாக3த ஜநபாலன ஸுமநோ
ரமண நிர்விகார நி3கமஸாரதர (ஜக)

10. அக3ணிதகு3ண கநகசேல
ஸால வித3ளநாருணப4 ஸமான சர
ணபாரமஹிமாத்4பு4த ஸுகவிஜந
ஹ்ருத்ஸத3ந ஸுரமுநி கணவிஹித
கலஶநீரநிதி4ஜாரமண பாபக3ஜ
ந்ருஸிம்ஹவர த்யாக3ராஜாதிநுத (ஜக)

குறிப்பு:—இந்தக் கீர்த்தனத்தில் 4, 6, 7, 8 சரணங்கள் 7, 4, 8, 6 ஆகச் சில நூல்களில் காணப்படுகின்றன.

## பதவுரை:

(ஜகதாநந்தகாரக) ஜகத்தை ஆனந்திக்கச் செய்கிறவனே, (ஜய ஜாநகீ ப்ராணநாயக)....(ககந அதிப) ஆகாசத்தின் யஜமானனுன, (ஸத்குலஜ) உயர்ந்த சூரிய குலத்தில் உதித்தவனே, (ராஜராஜேஶ்வர)....., (ஸுகுணுகர) நல்ல குணங்களுக்கு இருப்பிடமானவனே, (ஸுரஸேவ்ய) தேவர்களால் ஸேவிக்கப்பட்டவனே, (பவ்யதாயக) மங்களத்தைக் கொடுப்பவனே, (ஸதா ஸகல) எப்பொழுதும், எல்லா, (ஜகதாநந்த).....

(அமர தாரக நிசய) தேவர்களின் நக்ஷத்திரக் கூட்டத்திற்கு, (குமுத ஹித) சந்திரனைப் போன்றவனே, (பரிபூர்ண)....,(அநக) பாபம் அற்றவனே, (ஸுரபூஜ) தேவர்களுக்குக் கற்பக விருக்ஷம் போன்றவனே, (ததிபயோதி வாஸ) ராக்ஷஸர்களை, (ஹரண) அழிப்பவனே, (ஸுந்தரதர வதந) மிகவும் அழகான வதனத்தை உடையவனே, (ஸுதாமய வசோப்ருந்த) அமுதமயமான வார்த்தைகளை உடையவனே, (கோவிந்த)...., (ஸாநந்த) ஆனந்தமயமானவனே, (மாவர) லக்ஷ்மி நாயகனே, (அஜர ஆப்த) தேவர்களுக்கு வேண்டியவனே, (அநேக ஶுபகர) பல நன்மை புரிவோனே, (ஜகதா)—..

(நிகமநீரஜ) வேதங்களாகிய தாமரைகளுக்கு, (அம்ருத போஷக) அமுதத்தைப் போஷிப்பவனே, (அநிமிஷவைரி) தேவர்களின் விரோதிகளாகிய, (வாரித-ஸமீரண) மேகங்களுக்குக் காற்றைப்போலுள்ளவனே, (ககதுரங்க) கருட வாஹனனே, (ஸத்கவி ஹ்ருதய ஆலய) நல்ல கவிகளின் இருதயத்தில் இருப்பவனே, (அகணித வாநராதிப) கணக்கில் அடங்காத வானரங்களின் அதிபனுன ஆஞ்சநேயனுல், (நுத) துதிக்கப்பட்ட (அங்க்ரியுக) இரண்டு பாதங்கள் உள்ளவனே, (ஜகதா)..

(இந்த்ர நீலமணி) மரகதம், மாணிக்கம் முதலியவைகளின், (ஸந்நிப) காந்தியை, (அபகந) ஜயித்தவனே, (சந்த்ர ஸூர்யநயந) சந்திர சூரியர்களைக் கண்களாக உடையவனே, (அப்ரமேய) அப்ரமேயனே, (ஸகலேஶ) எல்லாவற்றிற்கும் ஈசனே, (ஶுப்ர நாகேந்த்ர ஶயந)

வெண்மையான ஸர்ப்பத்தில் சயனிக்கிறவனே, (ஶமநவைரி ஸந்நுத) யமனுடைய சத்ருவான பரம சிவனால் துதிக்கப்பட்டவனே (ஜகதா)..

(மௌநிஶாப) முனியின் சாபத்தை, (பாதவிஜித) பாதத்தினால் ஜயித்தவனே, அகல்யைக்குச் சாப விமோசனம் அளித்தவனே, (ஸவபரிபால) யக்ஞங்களைக் காப்பாற்றுபவனே, (வரமந்த்ர) உயர்ந்த மந்திரங்களை, (க்ரஹண லோல) கிரஹிப்பதில் ஆசையுள்ளவனே, (பரமஶாந்த சித்த) சாந்த சித்தத்தை உடையவனே, (ஜநகஜாதிப) ஜனக புத்திரியின் அதிபனே, (ஸரோஜபவ) ப்ரம்மாவுக்கு, (வரதா) வரமளிப்பவனே, (அகில) எல்லா, (ஜகதா....)

(ஸ்ருஷ்டி ஸ்தித்யந்தகாரக) ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலியவைகளைச் செய்பவனே, (அமிதகாமித பலத) பக்தர்களின் அதிகமான விருப்பங்களையும் அளிப்பவனே, (அஸமாநகாத்ர) நிகரற்ற அழகிய சரீரமுள்ளவனே, (ஶசீபதிநுத) தேவேந்திரனால் துதிக்கப்பட்டவனே, (அப்தி மதஹர) ஸமுத்ர ராஜனின் கர்வத்தை அடக்கினவனே, (அநுராக ராக) ராகாநுராகத்துடன், (ராஜித) பிரகாசிக்கிற, (கதாஸார ஹித) புராணங்களுக்கு ஹிதமானவனே, (ஜகதா)....

(ஸஜ்ஜந) நல்லோர்களின், (மாநஸ அப்தி) மனமாகிய ஸமுத்திரத்திற்கு, (ஸுதாகர) சந்திரனைப் போன்றவனே, (குஸுமவிமாந) புஷ்ப விமானமுள்ளவனே, (ஸுரஸா) ஸுரஸா என்ற ராக்ஷஸியின், (ரிபு) விரோதியான ஆஞ்ஜநேயரின், (கராப்ஜ) புஷ்பத்திற்கு ஸமானமான கைகளால், (லாலிதசரண) சுகமாகப் பிடிக்கப்பட்ட பாதங்களையுடையவனே, (அவகுண) அஞ்ஞானமுள்ள, (அஸுர கண) அஸுர கணங்களின், (மத) கர்வத்தை, (ஹரண) நாசம் செய்தவனே, (ஸநாதந) ஸநாதனனே, (அஜநுத) பிரம்மனால் துதிக்கப்பட்டவனே, (ஜகதா)..

(கரத்ருத) கைகளில் தரித்த, (ஶரஜால) பாணங்களின் கூட்டத்தையுடையவனே, (அஸுர) அஸுரனின், (மதஹரண) கர்வத்தை நாசம் செய்பவனே, (அவநிஸுர) பூதேவர்கள், (ஸுர) தேவர்கள் இவர்களால், (ஆவந) வந்திக்கப்பட்டவனே, (கவீந) கவிஶ்ரேஷ்டரான,

(பிலஜ மௌநி) வால்மீகியினால், (க்ருத சரித்ர) சரித்திரம் எழுதப்பட்டவனே, (ஸந்முக) ஸம்முகனே, (ஸ்ரீ த்யாகராஜநுத)...., (ஜகதா)..

(புராண புருஷ) புராண புருஷனே, (ந்ருவர) ராஜ ஶ்ரேஷ்டனே, (ஆத்மஜாஶ்ரித பராதீந) பக்தர்களுக்கு அபயம் அளிப்பவனே, (கரவிராதராவண) கரன், விராதன், ராவணன் இவர்களை, (விராவண) நாசம் செய்தவனே, (அநக) பாபமில்லாதவனே, (பராஶர மநோஹர) பராஶரரின் மனத்தைக் கவர்ந்தவனே, (அவிக்ருத) ஸநாதனமானவனே, (த்யாகராஜ ஸந்நுத)..., (ஜகதா)..

(ஓம்காரபஞ்ஜரகீர) ஓம்காரத்திற்குக் கிளியின் கூண்டைப் போன்றவனே, (புரஹர) த்ரிபுரத்தை அழிப்பவனே, (ஸரோஜபவ) பிரம்மா, (கேஶவாதி) விஷ்ணு ரூபமுள்ளவனே, (வாஸவ) இந்திரனின், (ரிபு) விரோதியான மேகநாதனின், (ஜநக) தகப்பனான ராவணனின், (அந்தக) ஸம்ஹாரனே, (கலாதர களாதர ஆப்த) சந்திரனின் கலையைத் தரித்த பரமேசுவரனுக்கு ஆப்தனே, (க்ருணாகர) நல்ல வாஸனையுள்ளவனே, (ஶரணாகத ஜநபால) சரணடைந்தவர்களை ரக்ஷிப்பவனே, (ஸுமநோ ரமண) தேவர்களை ஸந்தோஷிக்கச் செய்பவனே, (நிர்விகார) அழகுள்ளவனே, (நிகமஸாரதர) வேதங்களின் ஸாரமானவனே (ஜகதா)...

(அகணிதகுண) எண்ணற்ற குணங்களுடையவனே, (கநகசேல) பொன் ஆடை தரித்தவனே, (ஸாலவிதளந) சால விருக்ஷத்தை நாசம் செய்து கந்தர்வனின் சாபத்தைப் போக்கினவனே, (அருணாப ஸமாநசரண) சிவப்பான பாதங்களை உடையவனே, (அபாரமஹிம) மிகவும் மகிமை உள்ளவனே, (அத்புத ஸுகவிஜந) அற்புதமான கவிகளின், (ஹ்ருத் ஸதந) ஹ்ருதயத்தை வாஸமாகக் கொண்டவனே, (ஸுரமுநிகணவிஹித) ஸுரமுனி கணங்களுக்கு ஹிதம் செய்பவனே, (கலஶநீரநிதிஜா) பாற்கடலில் பிறந்த லக்ஷ்மிதேவியின், (ரமண) நாயகனே, (பாபகஜ) பாவங்களாகிய யானைகளுக்கு, (ந்ருஸிம்ஹ) ஸிம்ஹராஜனே, (வர) ஶ்ரேஷ்டமானவனே, (த்யாகராஜாதிநுத) த்யாகராஜன் முதலியவர்களால் வணங்கப்பட்டவனே, (ஜகதா)..

# எம்து$^{3}$ம்டி$^{3}$வெட$^{3}$லிதிவோ

ராகம்: தர்பார்] [தாளம்: த்ரிபுடை

“மும்மூர்த்திகளாகிய விஷ்ணு, சிவன், பிரம்மா இவர்களிடமும் சில குறைகள் இருக்கின்றனவே. அவை ராமபிரானிடம் கொஞ்சமேனும் இல்லையென்று துதிக்க, வைகுண்டம், கைலாசம், சத்தியலோகம் இம்மூன்றிலிருந்தும் வந்திருக்க முடியாது. நீ எங்கிருந்து வந்தாய்?” என்று ரஸமாகக் கேட்கிறார்.

ப. எம்து$^{3}$ம்டி$^{3}$ வெட$^{3}$லிதிவோ ? ஏயூரோ தெலிய
நிபுடை$^{3}$ந தெ$^{3}$லுபவய்ய (எம்)

அ. அம்த$^{3}$சம்த$^{3}$மு வேர்றநட$^{3}$தலெல்லத்ரிகு$^{3}$
ணாதீதமை யுந்நதே$^{3}$ காநி ஸ்ரீராம (எம்)

ச. சி$^{3}$டுகந்நபராத$^{4}$ சயமுலத$^{3}$கி$^{3}$லிம்சு-
ஶிவலோகமுகா$^{3}$து$^{3}$
வடுருபுடை$^{3}$ ப$^{3}$லிநிவம்சிம்சியணசுவாநி
வைகுண்டமுகா$^{3}$து$^{3}$ (எம்)
விடவசநமுலாடி$^{3}$ ஶிரமுத்$^{3}$ரும்பப$^{3}$ட்$^{3}$ட$^{3}$-,
விதி$^{4}$லோகமுகா$^{3}$து$^{3}$
திடவுத$^{4}$ர்மமு ஸத்யமும்ருது$^{3}$பா$^{4}$ஷலு க$^{3}$லுகு$^{3}$
தி$^{3}$வ்யரூப த்யாக$^{3}$ராஜ விநுத! நீ (எம்)

## பதவுரை:

(ஸ்ரீராம)..., (அம்தசம்தமு) உன் வனப்பும் லக்ஷணமும், (வேறு ஐ) வேறுபாடுடையனவாய், (நடதலு எல்ல) நடத்தை முழுவதும், (த்ரிகுணாதீதமுஜ) குணத்ரயத்தை அதிக்ரமித்து, (உந்நதே) இருக்கிறதே, (காநி) ஆகட்டும்-இருக்கட்டும்; (எந்து உம்டி) எங்கிருந்து, (வெடலிதிவோ) புறப்பட்டாயோ? (ஏ ஊரு ஓ) எந்த ஊரோ? (தெலியந்) அறியாதிருக்கிறேன்; (இபுடுஜநந்) இப்பொழுதாகிலும், (தெலுபவய்ய) தெரிவிப்பாய், ஐயனே! (சிடுகு அநந்) சிடுக்கென்றால், (அபராதசயமுலந்) அபராத் கோடிகளில், (தகிலிம்சு) சேர்த்துவிடுகிற, (சிவலோகமு காது), சிவலோகமல்ல; (வடுருபுடை)

பிரம்மசாரியாய், (பலிநிந்) பலிசக்ரவர்த்தியை, (வம்சிம்சி) வஞ்சித்து, (அணசுவாநி) பாதாளத்தில் அழுத்துகிறவனுடைய, (வைகுண்டமு காது) வைகுந்தமுமல்ல; (விட வசநமுலு) துர்ப்பாஷைகள், (ஆடி) பேசி, (சிரமு) தலை, (த்ரும்பநபட்ட) துணிக்கப்பட்ட, (விதி லோகமு) பிரம்மாவின் ஸத்ய லோகமும், (காது) அல்ல! (திடவு) தாருட்யம், (தர்மமு) வேதோக்த நியாயம், (ஸத்யமு) உண்மை, (ம்ருது பாஷலு) மிருதுவாகிய வார்த்தைகள், (கல்கு) அமைந்த, (திவ்யரூப) அழகிய திவ்ய சரீரமுடையவனே, (த்யாகராஜ விநுத தியாகராஜனால் நன்றாய்க் கொண்டாடப்பட்டவனே, (நீவு) நீ, (எந்து)....

## ஒகமாடயொக

ராகம்: ஹரிகாம்போதி] [தாளம்: ரூபகம்

ஸ்ரீராமபிரானுடைய விசேஷ குணங்களை விவரிக்கிறார்: ''அவனை ஒருபொழுதும் மறக்காமல் இருக்க வேண்டும், தீர்க்காயுசும் சௌக்கியமும் கொடுக்கும் தெய்வம் அவனே.''

ப. ஒகமாடயொகபா³ணமு
ஒக பத்நீ வ்ரதுடே³மநஸா

அ. ஒகசித்தமுக³லவாடே³
ஒகநாடு³நுமறவகுவே

ச. சிரஜீவித்வமு நிர்ஜர
வரஸௌக்²ய மொஸங்கு³நே
த⁴ரப³ரகெ³டி³ தே³வுடே³
த்யாக³ராஜவிநுதுடே³

### பதவுரை:

(மநஸா) மனமே, (ஒக மாட) ஒரு வார்த்தை, (ஒக பாணமு) ஒரே அம்பு, (ஒக பத்நீ வ்ரதுடே) ஏகபத்தினிவிரதனடா! (ஒக சித்தமு கலவாடு ஏ) ஒரே மனமுடையவன்; (ஒக நாடுநு) ஒருபொழுதும், (மறவகுவே) மறக்க வேண்டாம்! (சிரஜீவித்வமு) சிரஞ்ஜீவியாயிருத்தல், (நிர்ஜரவரஸௌக்யமு) சிறந்த தேவ போகம், (ஒஸங்குநே) கொடுப்பானையா! (தரந்) பூமியில், (பர

கெடு) வியாபித்திருக்கிற, (தேவுடுஏ) தெய்வமே, (த்யாகராஜ விநுதுடே) த்யாகராஜனால் கொண்டாடப் பட்டவனடா.

## ராமநீ ஸமாந மெவரோ

ராகம்: கரஹரப்ரிய] [தாளம்: ரூபகம்

ஸ்ரீராமபிரானின் உன்னதமான குணங்களைச் சொல்லி, ''உனக்கு ஸமமான தெய்வம் யாரும் இல்லை'' என்று போற்றுகிறார்.

ப. ராம நீஸமாநமெவரு
ரகு⁴வம்ஶோத்³தா⁴ரக

அ. பா⁴மா மருவம்புமொலக
ப⁴க்தியநுபஞ்ஜரபுசிலுக

ச. பலுகு பலுகுலகுதேநே
லொலுகுமாடலாடு³ஸோத³-
ருலுக³ல ஹரி த்யாக³ராஜ
குலவிபூ⁴ஷ ம்ருது³ஸுபா⁴ஷ

### பதவுரை:

(மருவம்பு மொலக) மருக்கொழுந்தைப் போன்று கோமளமாகிய, (பாமா) சீதா தேவியினுடைய, (பக்தியநு) பக்தி யென்கிற, (பஞ்ஜரபு) கூட்டிலிருக்கிற, (சிலுக) கிளியைப்போன்றவனே, (ரகுவம்ஶோத்தாரக) ரகுகுலத்தைச் சிறப்பித்தவனே, (ராமா).., (நீ ஸமாநமு) உனக்குச் சமானம், (எவரு) யார்? (பலுகு பலுகுலகுந்) ஒவ்வொரு வார்த்தைகளிலும், (தேநே) தேன், (ஒலுக) துளிக்கும்படியாய், (மாடலாடு) வார்த்தையாடுகிற, (ஸோதருலுகலு ஹரி) தம்பிகளையுடைய ஸ்ரீஹரி, (த்யாகராஜ குலவிபூஷ) தியாகராஜனுடைய குலத்திற்குத் தெய்வமே, (ம்ருதுஸுபாஷ) மிருதுவாய்ப் பேசுகிறவனே!

## உண்டே³தி³ ராமுடு³

ராகம்: ஹரிகாம்போதி] [தாளம்: ஆதி

''தேவாதி தேவனாய் எல்லோரையும் காப்பாற்றுபவனாய் விளங்குபவன் தர்மாத்மாவாகிய ஸ்ரீராமன் ஒருவன்தான்'' என்று உபதேசம் செய்கிறார்.

ப. உண்டே3தி3 ராமுடொ3கடே3
ஊரகசெடி3போகுமநஸா (உண்

அ. சண்ட3மார்தாண்ட3 மத்4ய
மண்ட3லமுந ஜெலங்கு3 (உண்)

ச. தாமஸாதி3கு3ண ரஹிதுடு3
த4ர்மாத்முடு3 ஸர்வஸமுடு3
க்ஷேமகருடு3 த்யாக3ராஜ
சித்தஹிதுடு3ஜக3மு நிம்டி3 (உண்)

## பதவுரை:

(உண்டேதி) இருக்கிறது, (ராமுடு ஒகடே) ஸ்ரீராமனொருவனே, (மநஸா) மனமே, (ஊரக) அறியாய் மாய், (செடிபோகு) கெட்டுப்போகாதே! (சண்ட) வெப்பத்தோடு கூடிய, (மார்தாண்ட) சூரியனுடைய, (மத்யமண்டலமுநந்) மத்தியப் பிரதேசத்தில், (செலங்குசுந்) பிரகாசித்துக்கொண்டு, (உண்டேதி).... (தாமஸாதி குணரஹிதுல) தாமஸ ராஜஸ குணங்களில்லாதவன், (தர்மாத்முடு), தர்மாத்மாவாகியவன், (ஸர்வஸமுடு) எல்லாவற்றிற்கும் ஸமமானவன் (நடுநிலையாயுள்ளவன்), (த்யாகராஜசித்த ஹிதுடு) த்யாகராஜனுடைய மனத்திற்கு ஹிதம் செய்கிறவன், (ஜகமுநிம்டி) ஜகமெங்கும் நிறைந்து, (உண்டேதி)....

## எவரிகை

ராகம்: தேவமனோஹரி] [தாளம்: சாபு

ப. எவரிகை யவதாரமெத்திதிவோ-
இபுடை3ந தெ3லுபவய்யா ராமய்யநீ (எவ)

அ. அவநிகிரம்மநி பிலிசிந மஹாரா-
ஜெவரோ? வாநிகி ம்ரொக்கெத3ராம (எவ)

ச. வேத3வர்ணநீயமௌ நாமமுதோ
விதி4 ருத்3ருலகு மேல்மியகருபமுதோ
மோத3ஸத3நமகு3 படுசரிதமுதோ—
முநிராஜவேஷிக3 த்யாக3ராஜநுதநீ (எவ)

**பதவுரை:**

(ராமய்யா) ஸ்ரீராமா! (எவரிகை) யாருக்காக, (அவதாரமு) இந்த அவதாரத்தை, (எத்திதிவோ) எடுத்தனையோ? (இபுடுஜநந்) இப்போதாகிலும், (தெலுபவய்ய) தெரியப் படுத்துவாய், ஐயனே! (அவநிகிந்) இந்தப் பூமிக்கு, (ரம்முஅநி) வா என்று, (பிலிசிந) அழைத்த, (மஹாராஜு) மஹாராஜர், (எவருஓ) யாவரோ, (வாநிகிந்) அவருக்கு, (ம்ரொக்கெதந்) நமஸ்கரிக்கிறேன். (த்யாகராஜ).... (ஸ்ரீராமா) ...., (எவரிகை) ...., (வேதவர்ணநீயமௌ) வேதங்களினால் துதிக்கத் தகுந்த, (நாமமுதோந்) திருநாமத்துடன், (விதிருத்ருலகுந்) பிரம்மருத்திரர்கட்கு, (மேல்மியக) ஶ்ரேஷ்டமாகிய, (ரூபமுதோந்) திவ்ய மங்கள விக்ரகத்தோடும், (மோதஸதநமுஅகு) ஆனந்தத் திற்கிருப்பிடமாகிய, (படுசரிதமுதோந்) சிறந்த சரித்திரத் தோடும், (த்யாகராஜநுத) தியாகராஜனால் கொண்டாடப் பட்ட ராமா (முநிராஜ வேஷிக) முனிவன், அரசன் இவ் வேஷத்தையுடையவனாய், (எவரிகையவதார மெத்தி திவோ)..

## தி[3]நமணிவம்ஶ

*ராகம்: ஹரிகாம்போதி]* *[தாளம்: ஆதி*

*தீனர்களுக்குச் சரணமளிப்பவனே! என் பிரார்த்தனை களைப் பிரியத்துடன் கேட்டு, என்னைக் காப்பாற்று.*

ப. தி[3]நமணிவம்ஶ திலகலாவண்ய
தீ[3]நஶரண்ய (தி[3])

அ. மநவிநி பா[3]கு[3]க[3] மதி[3]நி த[3]லம்சுசு
சநவுநநேல சாலு காஜாலு (தி[3])

ச. ஶர்வவிநுத நநு ஸம்ரக்ஷிம்சுநு
க[3]ர்வமுயேல கா[3]கவாரெவ்ரே
நிர்விகாரகு[3]ண நிர்மல கரத்[4]ருத
பர்வத த்யாக[3]ராஜ ஸர்வஸ்வமௌ (தி[3])

**பதவுரை:**

(த்யாகராஜ ஸர்வஸ்வமு ஔ) தியாகராஜனுக்கு முற்றுமான, (திநமணி வம்ஶ திலகலாவண்ய) ஸூர்ய வம்சத்தரசர்களுக்குத் திலகம்போன்ற அழகு

உடையவனே, (தீந ஶரண்ய) கஷ்டத்தால் வருந்துபவர் களுக்குச் சரணமளிப்பவனே, (மநவிநி) வேண்டுகோளை, (பாகுக மதிநி தலம்சு) நன்றாக மனத்தில் ஆலோசித்து, (சநவுநநேலு) அன்புடன் காப்பாற்று; (சாலுகாஜாலு) போதும்; இப்படிச் செய்வதே உனக்குத் தகும். (ஶர்வ விநுத) சிவனால் துதிக்கப்பட்டவனே, (நநு ஸம்ரக்ஷிம்சுநு கர்வமுயேல) என்னை ரக்ஷிக்காதிருப்பதில் கர்வமென்ன? (காகவாரெவரே) காப்பாற்றுகிறவர் யார்? (நிர்விகார குண) மாருத கல்யாண குணங்களுள்ளவனே, (நிர்மல) களங்கமற்றவனே, (கரத்ருதபர்வத) கோவர்த்தனம் தாங்கியவனே.

## நாரத³கா³ந லோல

*ராகம்: அடாண]* *[தாளம்: ரூபகம்*

*பிரபஞ்சத்தில் காணப்படுவதெல்லாம், பகவத் கடாக்ஷத்தால்தான் ஏற்படுகிறது என்பதை விளக்குகிறார்.*

ப. *நாரத³கா³நலோல— நதஜந பரிபால* *(நார)*

அ. *நீரதஸமநீல— நிருபமாகு³ணஶீல* *(நார)*

ச. *நீவுலேக பேதநுவுலு— நிரதமுகா³ நடு³சுநு*
*நீவுலேக யேதருவுலு— நிக்கமுகா³ மொலுசுநு*
*நீவுலேக யேவாநலு நித்யமுகா³ கு³ருசுநு*
*நீவுலேக த்யாக³ராஜு— நீகு³ணமுல நெடுபா³டு³நு* *(நார)*

### பொழிப்புரை:

*நாரத கானத்தை ரஸிப்பவனே, வணங்குபவர்களைக் காப்பாற்றுபவனே, மேகத்தைப் போன்ற நீலமேனி உடையவனே, ஒப்பற்ற குணங்கள் உள்ளவனே, நீ இல்லாமல் (உன் கருணையின்றி) ஜனங்கள் எப்படி வாழ முடியும்? நீ இல்லாமல் தாவரங்கள் எப்படித் தளிர் விடும்? நீயன்றி மழை எப்படிப் பெய்யும்? நீ இல்லாமல் போனால் தியாகராஜன் உன் குணங்களை எப்படிப் பாடமுடியும்?*

## துளஸீ பி³ல்வ

*ராகம்: கேதாரகௌள]* *[தாளம்: ஆதி*

ப. *துளஸீ பி³ல்வ மல்லிகாதி³*
*ஜலஜஸும பூஜல கை³கொநவே* *(து)*

அ. ஜலஜாஸந ஸநகாதி[3] ஸுராா்ச்சித
ஜலதாப[4] ஸுநாப[4] விபா[4]கர ஹ்ரு
ஜலேஶ ஹரிணாங்க ஸுக[3]ந்த[4] (து)

ச. உரமுந முக[2]முந—ஶிரமுந பு[4]ஜமுந
கரமுந நேத்ரமுந—சரணயுக[3]ம்பு[3]ந
கருணதோ நெநருதோ—பரமாநந்த[3]முதோ
நிரதமுநு ஶ்ரீத்யாக[3]ராஜ—நிருபாதி[4]குடை[3]
யர்சிம்சு (து)

## பொழிப்புரை:

ஜலஜாஸநர் (பிரம்மா), ஸநகர் முதலியவர் கைகளால் ஆராதிக்கப்பட்ட தாமரை நாபியுடையவனே, சூரியவம்சத்தை ஜ்வலிக்கச் செய்தவனே, சந்திரனைப் போன்றவனே, நல்ல கந்தம் உள்ளவனே! உன் மார்பில், முகத்தில், சிரத்தில், புஜங்களில், கைகளில், கண்களில், இரு பாதங்களில் துளசி, பில்வ, மல்லிகாதி நல்ல புஷ்பங்களால், கருணையுடனும், நல்ல மனத்துடனும் பரமானந்தத்துடனும் ஒரு பலனையும் அபேக்ஷிக்காமல் நான் செய்யும் பூஜையைப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

## ஸீதம்ம மாயம்ம

ராகம்: லலித] [தாளம்: ரூபகம்

ஸ்வாமிகள், ஸீதாபிராட்டி தம் தாயென்றும், ஸ்ரீ ராமபிரான் தம் தந்தையென்றும், லக்ஷ்மண பரதசத்ருக்னர்கள், கருடர், ஆஞ்சநேயர் இவர்கள் தம் சகோதரர்களென்றும் சொல்வதுடன், சிவபிரான் முதலிய பக்தாக்ரேஸர்கள் தம் பந்துக்களென்றும் கூறுகிறார். இதில் ஒரு விசேஷம், ஸ்வாமிகளின் பெற்ற தாயின் பெயர் ஸீதம்மா. தந்தையின் பெயர் ராமப் பிரம்மம். இவைகளைக் குறிக்கும் த்வனியும் கீர்த்தனையில் இருக்கிறது.

ப. ஸீதம்ம மாயம்ம—ஶ்ரீராமுடு[3] மாதண்ட்[3]ரி (ஸீ)

அ. வாதாத்மஜ ஸௌமித்ரி வைநதேய ரிபுமர்த[3]ந
தா[4]த ப[4]ரதாது[4]லு ஸோத[3]ருலு மாகு ஓ மநஸா (ஸீ)

ச. பரமேஶ வஸிஷ்ட பராஶர நாரத³ஶௌநகஶுக²
ஸுரபதி கௌ³தம லம்போ³த³ர கு³ஹ ஸநகா³துலு
த⁴ரநிஜ பா⁴க³வதாக்³ரேஸரு லெவரோ வாரெல்லநு
வரத்யாக³ராஜுநிகி பரம பா³ந்த⁴வுலு மநஸா (ஸீ)

பதவுரை:

(ஓ மநஸா) ஓ மனமே, (ஸீதம்ம மாயம்ம) ஸீதாதேவி என் தாய், (ஸ்ரீராமுடு மாதந்ட்ரி) ஸ்ரீராமர் என் தந்தை, (வாதாத்மஜ, ஸௌமித்ரி, வைநதேய, ரிபுமர்தந, தாத பரதாலு) ஆஞ்சநேயர் லட்சுமணர்களுடன் சத்ருக்னர், பிரம்மா, பரதர் முதலியவர்கள், (மாகுந்) எங்களுக்கு, (ஸோதருலு) சகோதரர்கள்; (பரமேஶ, வஸிஷ்ட, பராஶர, நாரத, ஶௌநக, ஶுக, ஸுரபதி கௌதம, லம்போதர, குஹ, ஸநகாதுலு) பரமசிவம், வஸிஷ்டர், பராசரர், நாரதர், சௌனகர், சுகர், இந்திரன், கௌதமர், விநாயகர், ஆறுமுகம், ஸநகஸநந்தனர்களும், (மேலும்) (தரந்) பூமியில், (நிஜபாகவதாக்ரேஸலு) பகவானின் அந்தரங்க பாகவத ஸ்ரேஷ்டர் (எவரு ஓ) யாரோ, (வாரு எல்லநு) அவர்கள் எல்லாரும், (ஓ மநஸா) ஓ மனமே, (வர த்யாகராஜுநிகிந்) ஸ்ரேஷ்டமான தியாகராஜனுக்கு, (பரமபாந்தவுலு) முக்கியமான பந்துக்கள்.

## சலமேலரா

ராகம்: மார்(க்)கஹிந்தோளம்] [தாளம்: ஆதி

ப. சலமேலரா ஸாகேத ராம (ச)

அ. வலசி.ப⁴க்தி மார்க³முதோநு நின்னு
வர்ணிம்சு சுந்ந நாதோ (ச)

ச. எந்து³போ³து³நே நேமி ஸேயுது³நு
யெச்சோடநேமொறபெ³ட்டுது³நு
த³ந்த⁴நலதோ ப்ரொத்³து³ போவலேநா
தாளஜாலர த்யாக³ராஜநுத (ச)

பதவுரை:

(சலமேலரா) கோபம் ஏனடா, (ஸாகேதராமா) அயோத்யா ராமா, (வலசி) மோகங்கொண்டு, (பக்தி மார்கமுதோநு) பக்தி மார்க்கத்தோடு, (நின்னு) உன்னை,

(வர்ணிம்சுசுந்ந நாதோ) துதித்துக்கொண்டிருக்கிற என்பேரில், (சலமேலரா).., (நே) நான், (எந்து போதுநு) எங்கே செல்வேன்? (நேநு ஏமிஸேயுதுநு) நான் என்செய் வேன்? (எச்சோடந்) எவ்விடத்தில், (மொறபெட்டுதுநு முறையிட்டுக்கொள்வேன்? (தந்தநலதோ) தந்திரத்தோடு, (ப்ரொத்து போவலேநுஆ) காலங் கழிய வேண்டுமா? (தாள ஜாலரா) சகிக்க மாட்டேனடா, (த்யாகராஜநுத) தியாகராஜனால் கொண்டாடப்பட்ட ராமா! (சல மேலரா)..

## வேறெவ்வரே க³தி

ராகம்: ஸுரடி] [தாளம்: ஆதி

"சிவபிரான், பிரம்மா முதலிய தெய்வங்களுக்கும் ஸநகர், நாரதர் முதலிய முனி ஶ்ரேஷ்டர்களுக்கும், எனக்கும் உன்னைவிட வேறு கதி யாருமில்லை'' என்று ராமபிரானைப் போற்றுகிறார்.

ப. வேறெவ்வரே க³தி
வேமாறுலகு ஸீதாபதி (வே)

அ. ஈரேடு³லோகமுலகா
தா⁴ருட³வகு³நிந்நுவிநா (வே)

ச. ப்³ருந்தா³ரகாதி³ முநி
ப்³ருந்த³ஶுகஸநக ஸநந்த³ந ஶ்ரீநாரதா³ர
விந்தோ³த்³ப⁴வ ஶ்ரீப⁴வ புரந்த³ருலகு
ஶ்ரீத்யாக³ ராஜுநிகிநிந்நுவிநா (வே)

### பதவுரை:

(ஸீதாபதி) ஸீதை நாயகா, (ஈரேடு) ஈரேழு, (லோகமுலகு) உலகங்கட்கும், (ஆதாருடவகு) ஆதார பூதனுயிருக்கிற, (நிந்நுவினு) உன்னைவிட, (வேமாறுலகு) ஆயிரம் தடவையிலும், (வேறெவ்வரே கதி) வேறு கதி யார்? (ப்ருந்தாரகாதி) தேவகணங்கள், (முநிப்ருந்த) முனிகணங்கள், (ஶுக) சுகர், (ஸநகஸநந்தந ஶ்ரீநாரத) ஸநக ஸநந்தனர், ஶ்ரீநாரதர், (அரவிந்தோத்பவ) தாமரையில் பிறந்தவர், (ஶ்ரீபவ) சிவன், (புரந்தருலகுந்) இந்திரன் முதலானவர்கட்கும், (த்யாகராஜுநிகி) தியாகராஜனுக்கும், (நிந்நுவிநா) உன்னைவிட வேறு யாரும் இல்லை.

## கத்$^{3}$த$^{3}$நுவாரிகி

ராகம்: தோடி] [தாளம்: ஆதி

(தெய்வம்) உண்டென்பார்களுக்கு உண்டு என்று பெரியோர்கள் சொல்லும் வார்த்தை என் விஷயத்தில் பொய்யாகுமா? என்முன் வந்து கண்ணாடிபோல் பிரகாசிக்கும் உன் முகத்தைக் காட்டக்கூடாதா? நித்திரையை நீத்து அழகிய தம்பூராவைக் கையில் எடுத்து, சுத்த மனத்துடன் சரியாகப் பாடி, பக்தி பண்ணுகிறவர்களை நீ காப்பாற்றுவாய் அல்லவா?

ப. கத்$^{3}$த$^{3}$நுவாரிகி கத்$^{3}$து$^{3}$கத்$^{3}$தநி மொர லநிடு$^{3}$
பெத்$^{3}$த$^{3}$ல மாடலு நேட$^{3}$ப$^{3}$த்$^{3}$த$^{4}$ மௌநோ (கத்$^{3}$)

அ. அத்$^{3}$த$^{3}$ம்பு சௌக்கிள்ளசே
முத்$^{3}$து$^{3}$கா$^{3}$ரு மோமுஜூட$^{3}$
பு$^{3}$த்$^{3}$தி$^{4}$ கலிகி$^{3}$ நட்டிமா
வத்$^{3}$த$^{3}$ராவதே$^{3}$மிரா (கத்$^{3}$)

ச. நித்$^{3}$துர நிராகரிம்சி முத்$^{3}$து$^{3}$க$^{3}$ தம்பு$^{3}$ரப$^{3}$ட்டி
ஶுத்$^{3}$த$^{4}$மைந மநஸுசே ஸுஸ்வரமுதோ
பத்$^{3}$து$^{3}$ தப்பக ப$^{4}$ஜியிம்சு ப$^{4}$க்தபாலநமுஸேயு
தத்$^{3}$த$^{3}$யஶாலிவிநீவு த்யாக$^{3}$ராஜ ஸந்நுத (கத்$^{3}$)

### பதவுரை:

(கத்தநுவாரிகி) கடவுள் இருக்கிறார் என்கிறவர்கட்கு, (கத்துகத்துஅநி) கடவுள் இருக்கிறார் இருக்கிறாரென்று, (மொறலநிடு பெத்தலமாடலு) முறையிட்டுச் சொல்லுகிற பெரியவர்களின் மொழிகள், (நேடு) இன்று (அபத்தமு ஔநா) பொய்யாகுமா? (அத்தம்பு சௌக்கிள்ளதோ) கண்ணாடியைப் போன்ற கன்னங்களோடு, (முத்துகாருமோமுந்) அழகு மிகுந்த திருமுகத்தை, (ஜூடந்) சேவிப்பதற்கு, (புத்தி கலிகிநட்டியா யொத்தந்) ஆசை கொண்டிருக்கிற எங்களிடத்தில் (ராவு அதேமிரா), வராததென்னையோ?

(நித்துர) உறக்கத்தை (நிராகரிம்சி) நிராகரித்து, (முத்துகா) நன்றாய், (தம்புரபட்டி) தம்புராவைக் கைப்பிடித்து, (ஶுத்தமைந மநஸ்ஸுசேந்) சுத்த மனத்தோடும், (ஸுஸ்வரமுதோந்) நல்ல ஸ்வரத்துடனும்,

(பத்துதப்பக) ஊக்கமொழியாமல், (பஜியிம்சு) பஜனம் செய்கிற, (பக்துல) பக்தர்களைக் (பாலநமு ஸேயு) காப்பாற்றி வருகிற (தத்தயாமாலிவி) அத்கைய பரமகிருபாநிதி, (த்யாகராஜ ஸந்நுத) த்யாகராஜனால் தோத்திரம் செய்யப்பட்ட ஸ்ரீ ராமா (நீவே) நீதான்..

## கொநியாடே3டு3

ராகம்: கோகிலத்வனி] [தாளம்: ஆதி

"நீ, என் விஷயத்தில் இன்னும் தாமதித்துப் பேரம் பண்ணிக் கொண்டிருக்கிறாயே. உனது சரித்திரத்தையும் குண விசேஷங்களையும் போற்றி, அதிகப் பிரியத்துடன் நான் பாடிக்கொண்டு இருக்கவில்லையா? நான் மற்ற மதங்களிடமும் தெய்வங்களிடமும் ஆசை வைக்கமாட்டேன் என்று உனக்கு நன்றாகத் தெரியுமே?" என்கிறார்.

ப. கொநியாடே3டு3 நாயெட3த3ய வெலகு
கொ3நியாடெ3த3வுஸா மீராமநிநு— (கொ)

அ. அநயமு நீமநஸுநு கநிபொங்கு3சு
அம்தரமுந நதிப்ரேமதோ நிநு (கொ)

ச. விம்தவிம்த மதமுலலோ ஜொரப3டி3
வெத ஜெந்தக3லேட3நு நீ மநஸுந
கிம்த தெ3லிஸி த்யாக3ராஜஸந்நுத
யே வேளநு நீமாப4சரிதமுநு (கொ)

### பதவுரை:

(ஸ்ரீராமா)...., (நிந்நு) உன்னை (கொநியாடேடு) பிரார்த்திக்கிற. (நாயெடுந்) என்பேரில், (தய) கிருபையை (வெலகுகொநி) விலைக்கு வாங்கி, (ஆடெதவுஸு) பேசுகிறாய்! அப்பா, (அநயமு) அனவரதம், (நீ) உன்னுடைய, (ஸொாகஸுநு) அழகை, (கநி) கண்டு, (பொங்குசுந்) மகிழ்ந்துகொண்டு, (அம்தரமுநந்) அந்தரங்கத்தில், (அதிப்ரேமதோ) மிகுந்த ஆசையோடு, (நிநு) உன்னை, (விம்தவிம்த) விந்தை விந்தையாகிய, (மதமுலலோந்) மதங்களில், (பற்பல சமயங்களில்), (ஜொரபடி) பிரவேசித்து, (வெதசம்தகந்லேட்நு) கஷ்டப்படவல்லேனில்லை; த்யாகராஜ ஸந்நுத) த்யாகராஜனால் நன்றாகக் கொண்டாடப்பட்ட ராமா! (நீ மநஸுநகுந்) உன் மனத்திற்கு,

(இம்த தெலிஸி) இவ்வளவு தெரிந்தும், (ஏவேள நு) எப்பொழுதும், (நீ ஸூபசரிதம்புநு) உன்னுடைய நற்சரித்திரங்களை, (கொநியாடேடு....யாடெதவுஸு)..

## கலிகி³யும்டே

ராகம்: கீரவாணி] [தாளம்: ஆதி

''நல்ல காரியங்களைச் செய்திருந்தால்தான், பகவத் கடாக்ஷம் கிடைக்கும். உத்தம பாகவதர்களாகிய நாரதர், பிரகலாதர் முதலியவர்கள் உன் பாத பக்தி செய்த விதமாய்த் தியாகராஜனும் செய்திருந்தால்தானே பகவத் கடாக்ஷம் கிடைக்கும்?'' என்கிறார்.

ப. கலிகி³யும்டேக³தா³ கல்கு³நு
காமித ப²லதா³யக (கலி)

அ. கலிகி இங்கி³த மெறுக³க நிந்நாடு³கொம்டி
சவமுஸேயகு நாதலநு சக்கநி வ்ராத (கலி)

ச. பா⁴க³வதாக்³ரே ஸருலகுநாரத³ ப்ரஹ்
லாதபராஶர ராமதா³ஸுலு
பா³கு³க³ஶ்ரீரகு⁴ ராமுநீபத³முல
ப⁴க்திஜேஸிநரீதி த்யாக³ராஜுநகிபுடு (கலி)

### பதவுரை:

(காமிதபலதாயக) கோரின பலன்களைக் கொடுக்கிறவனே, (கலிகியும்டிந்நகதா) சுகிருதம் உண்டாயிருந்தாலல்லவா (கல்குநா) உன் அருள் கிடைக்கும்? (கலிகி) அஞ்ஞானத்தினுல், (இங்கிதமெருகக) இதரர்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ளாமல், (நிந்நுந்) உன்னை, (ஆடுகொம்டி) தூஷித்தேன்; (சலமு) கோபம், (செயரு) செய்யாத, (நாதலநு) என் தலையில், (சக்கநிவ்ராத) நல்ல விதி,(கலிகியும்டிநகதா கல்குநு)..,(பாகவத.. தாஸுலு-பாகவதாக்ரேஸருலகு) பாகவத ஶ்ரேஷ்டர்களான, (நாரத) நாரதர், (ப்ரஹ்லாத) பிரஹ்லாதர், (பராஶர) பராஶரர், (ராமதாஸுலு) ராமதாஸர் முதலியவர்கள், (ஶ்ரீ ரகுராமா) ஶ்ரீரகுராமா, (பாகுகந்) நன்ருய், (நீபதமுலந்) உன் பாதங்களில்,(பக்திஜேஸிநரீதி) பக்தி செய்த விதமாய், (த்யாகராஜுநகுந்) இந்தத் தியாகராஜனுக்கும், (இபுடு) இப்பொழுது, (கலிகியுண்டிநகதா கல்குநு).

## யோசநா

ராகம்: தர்பார்] [தாளம்: ஆதி

ஸ்ரீராமபிரானைச் சரணமடைந்து, உன்னைச் சரணம் அடைந்த என்னைக் காப்பாற்ற உனக்கு என்ன யோசனை என்று வாது செய்கிறார்.

ப. யோசநா கமல
லோசந நநுப்[3]ரோவ (யோ)

அ. ஸூசந தெலியகநொருல
யாசநசேதுநநுசு நீகு தோசெநாத்[3]யுதி
விஜிதாயுத விரோசந
நந்நுப்[3]ரோவநிம்க (யோ)

ச. கேசந நிஜப[4]க்த நிசய பாபவிமோசந
க[3]ல பி[3]ருத[3]லெல்ல கொ[3]நிநந்
நேசநா க்ருத விபிநசரவராபி[4]
ஷேசந த்யாக[3]ராஜபூஜித (யோ)

### பதவுரை:

(கமலலோசநா) தாமரைக் கண்ணனே, (நநுப்ரோவந்) என்னைக் காப்பதற்கு, (யோசநா) யோசனையா? (த்யுதி) காந்தியினால், (விஜித) ஜயிக்கப்பட்ட, (அயுத) கணக்கற்ற, (விரோசந) சூரியர்களை உடையவனே, (ஸூசநா) மர்மம், (தெலியக) தெரியாமல், (ஒருலந்) பிறரை அல்லது பிற தெய்வத்தை, (யாசநா) யாசகம், (சேதுநு அநுசுந்) செய்வேன் என்று, (நீகுந் தோசெநா) உனக்குத் தோன்றியது, (நந்நுப்ரோவந்) என்னைக் காப்பதற்கு, (இங்க) இன்னும் (யோசநா) யோசனையா? (கேசநநிஜபக்த) சில உண்மையான பக்தர்களுடைய, (நிசய) சமூகத்தை உடையவனே, (பாபவிமோசந) பாபங்களைப் போக்கடிப்பவனே, (கநபிருது எல்லந்) உன்னுடைய விருதுகளை, (கொநி) உபகாரமாகக் கொண்டு, (நந்நு ஏசநா) என்னை ஏமாற்றுவதா? (க்ருத) செய்யப்பட்ட, (விபிநசர) வானரர்களுக்கு, (வர) ஶ்ரேஷ்ட, (அபிஷேசந) பட்டாபிஷேகம் செய்தருளியவனே, (த்யாகராஜபூஜித) த்யாகராஜனால் கொண்டாடப்பட்டவனே.

## து$^{3}$ர்மார்க$^{3}$சராத$^{4}$

ராகம்: ரஞ்ஜநி] [தாளம்: ரூபகம்

கெட்ட நடத்தையுள்ளவனை, பெரிய மனிதன் (துரை) என்று துதிக்கமாட்டேன். தவிர, சபையில் கெட்ட நடத்தையுள்ளவர்களுக்கு நல்ல வித்தையை விற்பவர்களை என்னால் புகழமுடியாது.

ப. து$^{3}$ர்மார்க$^{3}$ சராத$^{4}$முலநு
தொ$^{3}$ர நீவநஜாலரா (து$^{3}$ர்)

அ. த$^{4}$ர்மாத்மக த$^{4}$நதா$^{4}$ந்ய
தை$^{3}$வமு நீவையுண்ட$^{3}$க$^{2}$ (து$^{3}$ர்)

ச. பலுகுபோ$^{3}$டி$^{3}$நி ஸப$^{4}$லோந
பதிதமாநவுலகொஸகு$^{3}$
க$^{2}$லுலநெச்சடபொ$^{3}$க$^{3}$ட$^{3}$நி
ஸ்ரீகர த்யாக$^{3}$ராஜவிநுத (து$^{3}$ர்)

### பதவுரை:

(தர்மாத்மக) தர்மமே உருவெடுத்த ஸ்ரீராமனே, (தநதாந்யதைவமு) தனம் தான்யம் தெய்வமாயும், (நீவே யுண்டக) நீயே இருக்கும்போது (துர்மார்கசராதமுலநு) துர்நடத்தையுள்ளவர்களை, (தொர நீவநஜாலரா) நீ பிரபு என்று சொல்ல முடியாது; (பலுகுபோடிநி) ஸரஸ்வதியை (வித்யையை), (ஸபலோந) ஜனசபைகளில், (பதிதமாந வுலகு ஒஸகு) பாபிகளுக்கு விற்கும், (கலுவநு எத்ஸட பொகடுநு) துஷ்டர்களை எப்படிப் புகழ்வேன்?

## ஸரஸீருஹாநந

ராகம்: முகாரி] [தாளம்: தேசாதி

''இந்தக் கலிகாலத்தில், அதர்மங்கள் அதிகரித்து விட்டன. பிராம்மணர்களே தம் நல்ல வழிகளைக் கைவிட்டு வயிற்றுப் பிழைப்புக்காகப் பலவிதமாகப் பொழுது போக்குகிறார்கள்'' என்று விண்ணப்பம் செய்து தர்மத்தைக் காப்பாற்றுவதற்கு இது சமயம் என்று ஸ்ரீராமபிரானைப் பிரார்த்திக்கிறார்.

ப. ஸரஸீருஹாநந ராமா
ஸமயமுப்$^{3}$ரோவ சித்$^{3}$க$^{4}$ந (ஸ)

அ. பரபா[4]மல நர்சிம்சி யந்நமிடி[3]
பக[3]லு ரேயி ஸரஸ மாடு[3] வாரிநெரால்ல (ஸ)
ச. ப்[3]ரா ஹ்மணீகமுபா[3]யு நீசுல
ப்[3]ரதுகா யெநதி[3]கா[3]க யீ கலிலோ
ப்[3]ரஹ்மமைந மாடலு நேர்சுகொநி
ப[4]ரகெ[2]த[3]ரய்யா த்யாக[3]ராஜநுத (ஸ)

## பதவுரை:

(ஸரஸீருஹாநந) தாமரையிதழ் போன்ற கண்களை உடையவனே, (ராமா) ஸ்ரீராமா, (சித்கந) சிதாநந்தஸ்வரூபனே, (ப்ரோவந்) காப்பாற்றுவதற்கு, (ஸமயமு) ஸமயம். (பரபாமலந்) பரஸ்திரீகளை, (அர்சிம்சி) உபசரித்து, (அந்நமு இடி) அன்னமிட்டு, (பகலு) பகலும், (ரேயி) இரவும் (ஸரஸமு) ஸரஸங்கள், (ஆடுவாரிந்) செய்கிறவர்களை, (ஒல்லந்) ஆமோதிக்க மாட்டேன். (ஈ கலிலோந்) இந்தக் கலிகாலத்தில், (ப்ராஹ்மண்யமு) பிராம்மணவிருத்தி, (போயெந்) நசித்துப் போயிற்று, (நீசுல) நீசர்களுடைய, (ப்ரதுகு) பிழைப்பு, (ஆயெந்) ஆயிற்று. (அதிகாக) அதுவுமல்லாமல், (ப்ரஹ்மமைந) ப்ராஹ்மண சம்பந்தமான, (மாடலந்) வார்த்தைகளை. (நேர்சுகொநி) கற்றுக்கொண்டு, (பரகெத்தரு அய்யா) திரிகிறார்கள் ஐயா! (த்யாகராஜநுத) தியாகராஜனுல் கொண்டாடப்பட்ட ராமா!

## அல்கலல்ல

ராகம்: மத்யமாவதி] [தாளம்: ரூபகம்

சிவதநுசை வளைத்து ஒடிக்கும்போது, ஸ்ரீராமசந்திரனுடைய சுருண்ட மயிர்கள் குலுங்குவதைக் கண்டு ராஜரிஷியான விசுவாமித்திரர் எப்படி ஆனந்தித்தாரோ?

ப. அலகலல்லலாட[3]க[3]க[3]நி
யாராண்முநியெடு பொங்கெ[3]நொ (அ)
அ. செலுவுமீறக[3]நுமாரீ
சுநிமத[3]மண சுவேள (அ)
ச. முநிகநுஸைக[3]தெ[3]லிசிபிவ
த[4]நுவுநு விறிசெடிஸமயமுந த்யாக[3]ராஜவிநு
துநி மோமுந ரம்ஜில்லு (அ)

**பதவுரை:**

(அலகலு) சுருண்ட மயிர்கள், (அல்லாடக கநி) பலவிதமாகக் குலுங்குவதைக் கண்டு, (ஆராண்முநி) அந்த ராஜரிஷி விசுவாமித்திரர், (எடுபொங்க) எப்படிச் சந்தோஷித்தாரோ? (அலகலல்ல)...., (செலுவுமீறகனு) மிகவும் அழகாக, (மாரீசுநி) மாரீசனுடைய, (மதமணசுவேள) மதத்தை அடக்கும் சமயத்தில், (அலகலு)...., (முநிகநுஸைக தெலிசி) முனியினுடைய கண் ஜாடையால் அறிந்து, (சிவதநுவுநு) சிவனுடைய வில்லை, (விறிசெடிஸமயமுந) ஒடிக்கும் ஸமயத்தில், (த்யாகராஜ, விநுதுநி மோமுந) தியாகராஜனுல் கொண்டாடப்பட்ட ஶ்ரீராமனுடைய முகத்தில், (ரம்ஜில்லு) விளங்குகின்ற (அலகலு)..

## கநுகொ³ம்டிநி

ராகம்: பிலஹரி] [தாளம்: திஸ்ரஜாதி

ஸீதா, லக்ஷ்மண, பரத, சத்ருக்னர் எல்லோரும் பணிவிடை செய்யவும், ஆஞ்சநேயர் கால் பிடிக்கவும், சுக்கிரீவர் முதலியோர் துதிக்கவும், ஶ்ரீராமபிரானின் தரிசனம் தமக்கு இப்போது கிடைத்ததென்று ஆனந்திக்கிருர்.

ப. கநுகொ³ம்டிநி-ஶ்ரீ ராமுநிநேடு³ (கநு)

அ. இநகுலமந்து³யிம்முகா³நுபு³ட்டிந
இலலோந ஸீதா நாயகுநி நேடு³ (கநு)

ச. ப⁴ரத லக்ஷ்மண ஶத்ருக்நுலு கொலுவ
பவமான ஸுதுடு³ பாத³முலப³ட்டு
தீ⁴ருலைந ஸுக்³ரீவ ப்ரமுகு²லு
விநுதிஸேய த்யாக³ராஜநுநி நேடு³ (கநு)

**பதவுரை:**

(இநகுலமந்து) சூரியகுலத்தில், (யிமுகாநுபுட்டிந) பிறந்த, (ஸீதாநாயகுநி) ஸீதாநாயகரான ராமரை, (நேடு) இன்று, (கநுகொம்டிநீ) கண்ணுல் பார்த்தேன்: (பரத லக்ஷ்மண சத்ருக்நுலு கொலுவ) பரதர், லக்ஷ்மணர், சத்ருக்னர் பணிவிடை செய்ய, (பவமான ஸுதுடு) வாயுபுத்திரர் (ஆஞ்ஜனேயர்), (பாதமுலபட்டு) பாதங்களைப் பிடிக்க, (தீருலைந ஸுக்ரீவ ப்ரமுகுலு) தீரர்களான சுக்கிரீவர் முதலியோர், (விநுதிஸேய) துதிக்க, (த்யாகராஜநேடு) தியாகராஜனுல் பாடப்பட்டவனே!

## எந்தராநி

ராகம்: ஹரிகாம்போதி] [தாளம்: ஆதி

ப. எந்தராநி தநகெந்த போநி
செந்த விடு³வஜால, ஶ்ரீராம! (எந்)

அ. அந்தகாரி, நீசெந்தஜேரிஹநு
மந்துடை³ கொலுவலேதா³? (எந்)

ச. 1 ஶேஷுடு³ ஶிவுநிகி பூ³ஷுடு லக்ஷ்மண
வேஷியை கொலுவலேதா³? (எந்)

2 ஶிஷ்டுடு³ மௌநி வரிஷ்டுடு³ கொ³ப்ப வ
ஸிஷ்டுடு ஹிதுடு³கா³லேதா³? (எந்)

3 நரவர ! நீகை ஸுரக³ணமுலுவா
நருலை கொ³ல்வக³ லேதா ? (எந்)

4 ஆக³மோக்தமகு³ நீ கு³ணமுல ஶ்ரீ
த்யாக³ராஜு பா³ட³க³லேதா³? (எந்)

### பதவுரை:

(தநகு எந்தராநி, எந்தபோநி) எனக்கு எது வரட்டும், எது போகட்டும், (நீசெந்தவிடுவஜால ஶ்ரீராம) உன் ஸமீபத்தில் இருப்பதை விடமாட்டேன், ராமா! (அந்தகாரிநீசெந்தஜேரி) காலனுக்குக் காலனுகப் பரமசிவன் ஸமீபத்தில் வந்து, (ஹநுமந்துடைகொலுவ லேதா) ஹநுமானுகக் கைங்கர்யம் செய்யவில்லையா? (ஶேஷுடு ஶிவுனிகி பூஷுடு) பரமசிவனுக்கு ஆபரணமான ஆதிசேஷன் (லக்ஷ்மண்வேஷியைவேயலேதா) லக்ஷ்மணனுடைய ரூபமெடுத்து விளங்கவில்லையா? (ஶிஷ்டுடு மௌநி வரிஷ்டுடு கொப்ப வஸிஷ்டுடு) பரமஶிஷ்டரும் மஹர்ஷிஶ்ரேஷ்டரும் மேன்மை வாய்ந்தவருமான வஸிஷ்டர், (ஹிதுகாலேதா) உனக்கு ஹிதத்தைச் சொல்லும் மந்திரியாக இல்லையா? (நரவர ஸுரகணமு நீகை வாநருலை கொலுவலேதா) நரஶ்ரேஷ்ட! தேவகணங்கள் உனக்காக வானரங்களாகி ஊழியஞ் செய்யவில்லையா? (ஆகமோக்தமகு நீ குணமுல) வேதத்தில் சொல்லப்பட்ட உன் குணங்களை, (த்யாக ராஜு பாடக லேதா) தியாகராஜன் பாடவில்லையா?

## தொலி நே ஜேஸிந

ராகம்: சுத்தபங்காள] [தாளம்: ஆதி

''ஸ்ரீராம, நான் வருந்தி வேண்டியும் பராமுகமாக இருக்கிறாய். என்னை ஏளனம் செய்யும் ஜனங்களின் நடுவில் வைத்திருக்கிறாய். ஹரிபக்தர்களின் ஸமூஹத்தில் சேர்க்கவில்லை. இவை நான் பூர்வஜன்மத்தில் செய்த பூஜாபலன் என்று எண்ணுகிறேன்'' என்கிறார்.

ப. தொலி நே ஜே³ஸிந பூஜா ப²லமு
தெ³லிஸேநு; நாபாலி தை³வமா (தொ)

அ. பலுவித⁴முல நே த³லசி கரக³கா³
ப³லுகக நீவடு நேநிடு காக³ (தொ)

ச. ஸரிவாரலலோ சௌக ஜே³ஸி உ-
த³ர போஷகுலநு பொருகு³ந ஜேஸி;
ஹரிதா³ஸ ரஹித புரமுந வே³ஸி;
த³ரி ஜூப குண்ட³க³, த்யாக³ராஜார்சித (தொ)

பதவுரை:

(தொலி) முன் ஜன்மத்தில், (நேன் ஜேஸிந) நான் செய்த, (பூஜாபலமு) பூஜாபலம், (தெலுஸுநு) தெரிந்தது; (பலுவிதமுலந்) பலவிதமாக, (நே தலசி) நான் எண்ணி, (கரககந்) உருகிக்கொண்டிருந்தும், (பலுகக) பேசாமல், (நீ வடு) நீ இருப்பதும், (நே நிடு) நான் இப்படி, (காகந்) இருப்பதும், (த்யாகராஜார்சித)..., (ஸரிவாரலலோ ந) சமானமானவர்களில், (சௌகஜேஸி) என்னை உதாஸீனம் செய்து (உதர போஷகுலநு) வயிறு வளர்க்கிறவரை, (பொருகுநந்) என் அண்டையில், (ஜேஸி) இருக்கச் செய்து, (ஹரிதாஸ ரஹித புரமுநந்) ஹரிதாஸர்கள் இல்லாத ஊரில், (வேஸி) என்னை வைத்து, (தரி ஜூப குண்டகந்) வழியைக் காட்டாதிருப்பது, (தொலிநே)......

## தெலியலேரு

ராகம்: தேநுகா] [தாளம்: தேசாதி

''சில மனிதர்கள் க்ஷேத்திரங்களுக்குப் போய்க் காலையில் ஸ்நானம் செய்து பலவித அலங்காரங்களால் பண்டிதர்போல் பாவனை செய்து பணத்தைச்

சம்பாதிக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு நிஜ பக்தி இல்லை. பக்தி மார்க்கம் தெரியாதவர்களாக இருப்பதால், ஒருவிதப் பயனும் அடைவதில்லை'' என்கிறார்.

ப. தெலியலேரு ராம ப³க்திமார்க³முநு (தெ)

அ. இலநம்த³டதி³ருகு³சு³நு-க³லுவரிம்சேத³ரு கா³நி (தெ)

ச. வேக³லேசி நீட³ முநிகி³ பூ⁴திபூ³ஸி—
வேள்ளநெம்சி வெலிகி³ஶ்லாக⁴ நீயுலை
பா³க³ பைக மார்ஜந லோலுலை—
ரேகா³நி த்யாக³ராஜவிநுத (தெ)

## பதவுரை:

(இலந்) பூமியில் (சிலர்), (அந்தடந்) எல்லாப் பிரதேசங்களிலும், (திருகுசுநு) திரிந்துகொண்டு, (கலுவரிம்சேரு ஏகாநி) கலவரப்படுகிறார்களேயொழிய, (பக்திமார்கமுநு) பக்தி மார்க்கத்தை, (தெலியலேரு) அறியமாட்டார்கள். (வேகுஅ) விடியற்காலையில், (லேசி) துயிலெழுந்து, (நீடந்) தண்ணீரில், (முநிகி) ஸ்நாநம் செய்து, (பூதிபூஸி) விபூதியணிந்து, (வேள்ளநெம்சி) விரல் விட்டெண்ணி, (வெலகிந்) வெளிக்கு, (ஶ்லாகநீயுலை) பெருமை தங்கியவர்களாய், (பாகுகந்) நன்றாய், (பைகமு ஆர்ஜந லோலுரு ஐரகாநி) திரவியத்தைச் சம்பாதிப்பதில் பேராசையுள்ளவர்களானார்களே ஒழிய, (த்யாகராஜநுத) தியாகராஜனால் சேவிக்கப்பட்ட, ஸ்ரீராமா!

## ஸாகி²யெவ்வரோ

ராகம்: கானடா] [தாளம்: தேசாதி

இந்தக் கீர்த்தனையில் தியாகராஜ ஸ்வாமிகளுக்கும் காந்தியடிகளுக்கும் பொதுவாக இருந்த கொள்கைகள் தெரிகின்றன. பகவானுக்குள்ள ஆயிரம் நாமங்களில் 'ராம' என்கிற தாரக நாமத்தில்தான் இரு மகான்களுக்கும் மிகுந்த பிரியம். தவிர, சத்தியம், மதபேதமில்லாமை, பொதுஜன சேவை இவற்றைக் கடைப்பிடித்தொழுக வேண்டும் என்பதை இந்தக் கீர்த்தனத்தில் தியாகராஜர் தெரிவிக்கிறார். மகாத்மா காந்தி காட்டிய வழியும் இதுதான்.

இவ்விரண்டு அவதார புருஷர்களுக்கும் பணத்தில் ஆசை இல்லை. தஞ்சை அரசனிடம் போய்ப் பாடி ஸம்மானம் பெற்றுக்கொள்ள இஷ்டப்படாமல் 'நிதி சால ஸுகமா' என்ற கீர்த்தனையைப் பாடித் திருப்தி அடைந்தார் ஸ்வாமிகள். தினம் தவறாமல் அதிகாலையில் துயிலெழுந்து தம்பூராவுடன் ('தம்புரா சை பட்டி)' ஸ்வாமிகள் பஜனை செய்வார். காந்தியடிகளின் ஆசிரமத்திலும் இப்படியே பகவத் தியானமும் பஜனையும் நடந்து வந்தன.

ஸ்வாமிகளின் நூறும் ஆண்டு ஆராதனை உத்ஸவம் நடந்தபோது, அதே பகுள பஞ்சமியில் மகாத்மா காந்தியும் அமரர் ஆனார்.

இவர்கள் காட்டிய வழியைப் பின்பற்றாததால்தான் நம் புண்ணிய தேசம் பலவிதமாகத் துன்புறுகிறது.

ப. ஸுகி$^{2}$ யெவ்வரோ ராமநாம
ஸுகி$^{2}$ யெவ்வரோ

அ. ஸுகி$^{2}$ யெவ்வரோ ஸுமுகி$^{2}$
யெவ்வரோ ஆகி$^{2}$ல ஸாரமகு$^{3}$ தாரகநாம

ச. ஸத்யமு தப்பக$^{3}$ ஸகலலோகுலகு
ப்$^{4}$ருத்யுடை தை$^{3}$வபே$^{4}$த$^{3}$மு லேக
நித்யமைந ஸுஸ்வர கா$^{3}$நமுதோ
நிரம்தரமு த்யாக$^{3}$ராஜநுத

**பதவுரை:**

(ராமநாம) ஸ்ரீராம நாமத்தினுடைய, (ஸுகியெவ்வரோ) சுகத்தை அநுபவிப்பவன் எவனோ, (அகில ஸாரமகு) எல்லாவற்றிலும் ரஸமான, (தாரக நாம ஸுகி) தாரக நாமத்தின் சுகத்தை எவன் அநுபவிப்பவனோ, (ஸத்யமு) சத்தியமான நன்மார்க்கத்தை, (தப்பக) தப்பாமல், (ஸகல லோகுலகுந்) எல்லா உலகத்தாருக்கும், (ப்ருத்யுடை) தாஸனாய், (தைவபேதமு லேக) மற்றத் தெய்வங்களிடம் துவேஷ புத்தியில்லாதவனாய், (நித்யமைந) நிலையாகிய, (ஸுஸ்வர காநமுதோ) சுத்தமான ஸ்வரங்களோடு கூடிய கானத்தினால், (நிரந்தரமு) எப்பொழுதும், (த்யாகராஜநுத) தியாகராஜனால் துதிக்கப்பட்ட, (ராமநாம ஸுகி யெவ்வரோ) ஸ்ரீ ராம நாம சுகத்தை அநுபவிப்பவன் எவனோ......

# வாடே$^3$ரா தை$^3$வமு

*ராகம்: பந்துவராளி]* *[தாளம்: ஆதி*

ராமபிரானைத் தம் இஷ்ட தெய்வமாகக் கொண்ட காரணத்தை விளக்குகிறார். சொன்ன வார்த்தை தவறாதவன் என்று சந்திரசூரியர்கள் உள்ளவரை கீர்த்தி பெற்று, இந்திராதி தேவர்களையும் ஸாது ஜனங்களையும் ரக்ஷித்துத் துஷ்டர்களைத் தண்டிக்கக் கோதண்டபாணியாக விளங்கி, ஸம்ஸார ஸாகரத்தைக் கடக்க உதவுபவனும் சிவபிரானால் போற்றப்பட்ட தாரக (ராம) மந்திரத்தைத் தன் பெயராகக் கொண்டவனுமான தெய்வம், ஓ மனமே....

ப. வாடே$^3$ரா தை$^3$வமு மநஸா

அ. ஆடி$^3$ந மாடலு தப்பட நுஸா நு
ஆசந்த்$^3$ ரார்க்கமுக$^3$ கீர்த்தி க$^3$லிகி$^3$ந

ச. த$^3$ண்டி$^3$ ரக்கஸால மத$^3$மணசநு யா—
க$^2$ண்ட$^3$லாதி$^3$ ஸுர கோட்லநு பூ$^4$—
மண்ட$^3$ல ஸுஜநுல பாலிம்பநு கோ—
த$^3$ண்ட$^3$ பாணிரூபமுதோ வெலஸிந [வாடே$^3$ரா
தா$^3$ரி தெலியலேநி யஜ்ஞுலகு ப$^4$வ
நீரதி$^4$ தா$^3$டி மோக்ஷமந்து$^3$டகு
நீரஜாரி த$^4$ருடு$^3$பதேஸிம்சே
தாரகநாமமுதோநு வெலஸிந— [வாடே$^3$ரா
தா$^4$த்ருவிநுதுடை$^3$ந த்யாக$^3$ராஜுநி
சேத பூஜலந்தி$^3$ பா$^3$கு$^3$க$^3$ ப்ரத்
யோத நாந்வயமுநநு ஜநிம்சி
ஸீதாபதியநி பேரு கலிகி$^3$ந [வாடே$^3$ரா

## பதவுரை:

(மநஸா) ஓ மனமே! (வாடேரா தைவமு) அவன் தானடா தெய்வம்; (ஆடிந மாடலு) சொன்ன வார்த்தைகளை, (தப்படு அநுஸு) தப்ப மாட்டான் என்று; (ஆசந்த்ர அர்க்கமுக) சந்திரசூரியர்கள் உள்ளவரை, (கீர்த்தி கலிகிந) கீர்த்தியை அடைந்தவனும், (தண்டி ரக்கஸால) தண்டிக்க வேண்டியவர்களின், (மதமு அணசநு) கர்வத்தை அடக்குவதற்கும், (ஆகண்டலாதி ஸுரகோட்லகு) இந்திரன் முதலிய தேவகோடிகளை

யும், (பூமண்டல ஸுஜநுலந்) பூமியில் ஸாதுக்களையும், (பாலிம்பநு) காப்பாற்றுவதற்கும், (கோதண்டபாணி ரூபமுதோ) கோதண்டபாணியாகி, (வெலஸிந) பிரகாசித்த, (தாரி) வழி, (தெலிய லேநி) தெரியாமல் உள்ள, (அஜ்ஞுநுலகு) மூடர்களுக்கு, (பவநீரதி) ஸம்ஸாரக் கடலை, (தாடி) தாண்டி, (மோக்ஷம அந்துடகு) மோக்ஷத்தை அடைய, (நிரஜாரிதருடு) சந்திரனைத் தரிப்பவன் (சிவன்), (உபதேசிம்சு) உபதேசிக்கும், (தாரக நாமமுதோநு) தாரக நாமமாகிற ராம என்னும் பெயருடன், (வெலஸிந) விளங்கின, (தாத்ருவிநுதுடைந) பிரம்மாவினுல் துதி செய்யப்பட்டவனும், (த்யாகராஜுநி சேத பூஜலந்தி) தியாகராஜன் கைகளால் பூஜைகளை ஏற்றுக்கொண்ட, (பாகுக) நன்ருக, (ப்ரத்யோதந அந்வயமுநநு) சூரிய வம்சத்தில், (ஜநிம்சி) பிறந்து, (ஸீதாபதியநி பேரு கலிகிந) சீதாபதி என்ற பெயரை அடைந்த (ராமனே தெய்வம்).

## தெலிஸி ராம சிம்தநதோ

ராகம்: பூர்ணசந்த்ரிகா] [தாளம்: ஆதி

பஞ்ச இந்திரியங்களையும் அடக்கிப் பக்தியுடனும், பகவத் தியானத்துடனும் பஜனை செய்யவேண்டும் என வலியுறுத்துகிருர் ஸ்வாமிகள். இதற்குரிய காரணங்களையும் மூன்று சரணங்களில் விவரிக்கிருர். தாரக நாமமாகிய 'ராம' என்பது அழகிய ஸ்திரீகளையும் குறிக்கும். 'அர்க்க' என்ருல் சூரிய பகவான். எருக்கஞ் செடிக்கும் அதே பதந்தான். 'அஜ' என்னும் பதம் பிரம்மாவையும் ஆட்டையும் குறிக்கும். அர்த்தம் உணர்ந்து கீர்த்தனைகளைப் பாடாவிட்டால் பயன் அளிக்காது: தெரிந்து கேட்டால் பயன் உண்டு.

ப. தெலிஸி ராமசிம்தநதோ நாமமு
ஸேயவே ஓ மநஸா

அ. தலுபு லந்நி நிலிபி நிமிஷமைந
தாரக ரூபுநி நிஜதத்வமுலநு

ச. ராமாயந சபலாக்ஷுல பேரு
காமாது³ல போ³ருவாரு வேரு
ராமாயந ப்³ரஹ்மமுநகு பேரு
ஆமாநவ ஜநநார்த்துலு தீ³ரு

அர்க்கமநுசு, ஜில்லெடுதரு பேரு
மர்க்கட பு³த்³து⁴ லெட்டு தீரு
அர்குட³நுசு பாஸ்கருநிகி பே³ரு கு
தர்க்கமநு அந்த⁴காரமு தீ³ரு
அஜமநுசு மேஷமுநகு பே³ரு
நிஜகோரிக லேலா கீ³டே³ரு
அஜுடநி வாகீ³ச்வருநி³ பே³ரு
விஜயமு கல்கு³நு த்யாக³ராஜநுதுநி.

பதவுரை:

(ஓ மநஸா) மனமே, (தெலிஸி) தெரிந்து, (ராம சிந்தநதோ) ராமத் தியானத்துடன், (நாமமு ஸேயவே) நாம பஜனை செய்; (தலுபுலந்நி நிலிபி) மற்ற யோசனைகளை நினைப்பதை நிறுத்தி, (தாரக ரூபுநி) தாரக நாமமுள்ள ஸ்ரீராமனுடைய, (நிஜதத்வமுலநு) நிஜ தத்துவங்களை, (தெலிஸி) அறிந்து; (ராமாயந) ராம என்பதற்கு, (சபலாக்ஷுல் பேரு) சபலக் கண்கள் உள்ள ஸ்திரீகள் என்று பெயர்; (காமாதுல போருவாரு வேரு) காமத்துடன் போரிடுவார் வேறு; (ராமாயந) ராம என்பது, (ப்ரஹ்மமுநகு பேரு) பரப்பிரம்மத்தின் பெயர்; (ஆமாநவ ஜநநார்த்துலு தீரு) அது வாழ்க்கையின் கஷ்டங்களைத் தீர்க்கும்; (அர்க்கமநுசு ஜில்லெடுதரு பேரு) எருக்கம் என்றால் கள்ளிச் செடிக்குப் பெயர்; (மர்க்கட புத்துலெட்டுதீரு) குரங்குப்புத்தி எப்படி மாறும்? (அர்க்குடநுசு பாஸ்கருநிகி பேரு) அர்க்க என்றால் சூரியனுக்கும் பெயர்; (குதர்க்கமநு அந்தகாரமு தீரு) குதர்க்கமாகிய இருள் போகும்; (தெலிஸி) .......... (அஜமநுசு மேஷமுநகு பேரு) அஜம் என்று ஆடுகளுக்குப் பெயர்; (நிஜகோரிகலேலா கீடேரு) நினைத்த கோரிக்கை எப்படி நிறைவேறும்? (அஜுடநி வாகீச்வருநிகி பேரு) அஜம் என்றால் பிரம்மாவிற்கும் பெயர்; (விஜயமுகல்கநு) இவரை நினைத்தால் ஜயம் உண்டாகும்; (த்யாக்ராஜநுதுநி) தியாகராஜனால் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட....

## ராமப⁴க்தி

ராகம்: சுத்தபங்காள] [தாளம்: ஆதி

ஸ்ரீ ராமபக்தி ஒரு ஸாம்ராஜ்யமே. அதை அடைந்தவர்களின் தரிசனம் எல்லாக் கஷ்டங்களையும் போக்கி

ஆனந்தத்தைக் கொடுக்கும். அதனை அநுபவித்தவர் களுக்குத்தான் அது நன்ருகத் தெரியும்.

ப. ராமப4க்தி ஸாம்ராஜ்யமே
மாநவுல கப்3பெ3நோ மநஸா

அ. ஆமாநவுல ஸம்த3ர்சந
மத்யந்த ப்3ரஹ்மாநந்த3மே

ச. ஈலாக3நி விவரிம்பலேநு
சாலா ஸ்வாநுப4வ வேத்3யமே
லீலா ஸ்ருஷ்ட ஜக3த்ரயமநே
கோலாஹல த்யாக3ராஜநுதட3கு

பதவுரை:

(மநஸா) மனமே! (ராமபக்தி) ராமனிடம் பக்தி என்ற, (ஸாம்ராஜ்யமு) சக்கரவர்த்தி பதவி, (ஏ மாநவுலகுந்) எவருக்கு, (அப்பெனோ) கிடைத்ததோ, (ஆமாநவுல ஸம்தர்சநமு) அந்த மனிதர்களின் நல்ல தரிசனம், (அத்யந்த ப்ரஹ்மாநந்தமே) அதிகமான பிரம்மானந்தமே, (ஈலாகு அநி) இத்தகையது என்று, (விவரிம்ப லேநு) சொல்ல முடியாது; (சால ஸ்வாநுபவ வேத்யமே) அது அதிகச் சொந்த அநுபவத்தால் அறியத் தக்கதே; (லீலாஸ்ருஷ்ட) லீலையால் சிருஷ்டிக்கப்பட்ட, (ஜகத்ரயமுநந்) மூவுலகங்களிலும், (கோலாஹல) எக்களிப்புடன் கூடியது, (த்யாகராஜநுதடு) தியாகராஜனுல் கொண்டாடப்படுகிற..(ராமபக்தி)....

## அநுபம கு3ணாம்பு3தி4

ராகம்: அடாணு] [தாளம்: ஜம்ப

நீ நிகரில்லாத குணநிதி என்று நம்பி உன்னையே அண்டினேன். என்னைக் கேட்காமல் இருக்கிருய். தேவர்களைப் பரிபாலிப்பவனே, கஜேந்திரனைக் காப்பாற்றுபவனே. ஜனகரின் மருமகனையும், ஸீதையின் ரக்ஷகனையும், ஜகத் ஸ்ருஷ்டிகர்த்தாவாகவும் உள்ள உன்னையே நம்பியுள்ளேன். ஸ்வர்ண மயமான ஆடை தரித்தவனே! என்னைப் பார்க்க என்ன வஞ்சனை? உன் நாம பஜனை செய்து வருகிறேனல்லவா? அளவற்ற சேலைகளைக் கொடுத்துக் காத்ததை அறிந்து சொப்பனத்திலும் நீயே ரக்ஷிப்பவனென்று நம்பினேன்.

ப: அநுபம கு$^{3}$ணம்பு$^{3}$தி$^{4}$ யநி நிந்நு நேரநம்மி
அநுஸரிம்சிந வாட$^{3}$ நைதி

அ: மநுபக$^{3}$யே யுந்நாவு மநுபதீ! வ்ராசி மே
மநுபமாகெவரு விநுமா த$^{3}$யராநி

ச: ஜநக ஜாமாதவை ஜநகஜா மாதவை
ஜநக ஜாலமு சாலுநு சாலுநு ஹரீ
கநகபடத$^{4}$ர நந்நு கந கபட மேல
தநுகநகபட$^{2}$நமு ஸேதுகா$^{3}$நி பூ$^{4}$நி

கலலோநு நீவே ஸகலலோக நாத$^{3}$ கோ
கலு லோகுவக$^{3}$நிச்சி கா$^{3}$சிநதி$^{3}$ விநி
ராஜகுல கலஶாப்தி$^{4}$ ராஜ ஸுர$^{4}$ரபால க$^{3}$ஜ
ராஜரக்ஷக த்யாக$^{3}$ராஜவிநுத

**பதவுரை:**

(த்யாகராஜ விநுத)..., (ராஜகுல கலஶாப்திராஜ) ராஜகுல சமுத்திரத்துக்குச் சந்திரனைப்போல் பிரகாசிப்பவனே, (ஸுரபால) தேவர்களை ரக்ஷிப்பவனே, (கஜராஜ ரக்ஷக) கஜேந்திரனைக் காத்தவனே, (ஜநக ஜாமாதவை) ஜனக ராஜனுக்கு மாப்பிள்ளையானவனே, (ஜநகஜா மாதவை) ஜானகியின் மாதா (பூமிதேவி) போல் உள்ளவனே, (ஜநக) தந்தையே, (ஜாலமு சாலுநு) உன் ஜாலம் போதும்; (கநகபடதர) பீதாம்பரம் தரித்தவனே, (நந்நு கந) என்னைக் காப்பாற்றுவதற்கு, (கபட மேல) என்ன கபடம், (தநு கநக) உன்னைப் பார்ப்பதற்கு, (படநமு ஸேதுகாநி) நாம பஜனை செய்ததல்லாமல், (பூநி கலலோநு நீவே) இந்த உலகத்தில் கனவிலேகூட, (ஸகல லோகநாத) எல்லா உலகங்களுக்கும் நாதனே; (காகலு லோகுவகநிச்சி) புடைவைகளை வளரச் செய்ததை எண்ணி, (நிந்நு) உன்னை, (அநுபம குணம்புதியநி) நிகரில்லாத ஸத்குணக் கடலாக, (நேர நம்மி) நன்ருக எண்ணி, (அநுஸரிஞ்சிந வாடநைதி) உன்னை நாடிக்கொண்டிருந்தேன்; (அநுபகநே யுந்நாவு) என்னைக் கேட்காமல் இருக்கிருய்; (மநுபதி) மநு வம்சத்தில் வந்த அரசனே; (வ்ராசி மேமநுபமாகெவரு விநுமா தயராநி) என்னைக் காப்பாற்ற வேறு எவர்? தயையுடன் சொல்லு.

## ஆட$^3$மோடி$^3$ க$^3$லதே$^3$

ராகம்: சாருகேசி] [தாளம்: ஆதி

ஓ ராமா, உன்னைப் பார்க்க வருபவர்களிடம் மந்த ஹாஸத்துடன் முதலில் பேசுவாய் என்பது பிரசித்தமே. சுக்கிரீவனுடைய மந்திரியாய், ராஜதந்திரியாய் வந்த ஹநுமானிடங்கூட லக்ஷ்மணனை விட்டுப் பேசச் சொன்னாய்; நீயே எனக்குத் தோழன் என்று பக்தியுடன் உன் பாத கமலங்களை ஆசிரயிக்கும் என்னுடன் பேசுவதற்கு வாது எதற்கு?

ப. ஆட$^3$மோடி$^3$ க$^3$லதே$^3$ ராமய்ய மாட (லாட$^3$)

அ. தோடு$^3$நீட$^3$ நீவேயநுசுநு ப$^4$க்திதோ
கூ$^3$டி$^3$நபாத$^3$மூல பட்டிந நாதோமாட (லாட$^3$)

ச. சது$^3$வுலந்நி தெ$^3$லிஸி ஶங்கராம்ஶுடை$^3$
ஸத$^3$யு டா$^3$ஶுக$^3$ ஸம்ப$^4$வுடு$^3$ ம்ரொக்க
கத$^3$லு தம்முநி ப$^3$ல்க ஜேஸிதிவி கா$^3$
கநு த்யாக$^3$ராஜுயாடி$^3$ந மாட (லாட$^3$)

**பதவுரை:**

(மாட ஆடக) வார்த்தை பேசுவதற்கு, (மோடி கலது ஏ) வாது எதற்கு? (தோடு நீட நீவேயநுசுநு) தோழன் நீயே என்று, (பக்திதோ கூடி) பக்தியுடன், (பாதமூலந் பட்டிநந்) பாதங்களைப் பிடித்தாலும், (சதுவுலு அந்நி தெலிஸி) கலைகளை யெல்லாம் தெரிந்து, (ஶங்கராம்ஶுடை) ருத்ராம்சமானவனும், (ஸதயுடு) தயையுள்ளவனும், (ஆஶுகஸம்பவடு) வாயு புத்திரனும் ஆன ஆஞ்ஜனேயன், (ம்ரொக்ககந்) வணங்கியபோது; (கதலு) கதைகளை, (தம்முநி) தம்பியை, (பல்கந் சேஸிதிவி) பேசும்படி செய்தாய்; (காகநு) ஆகவே, (த்யாகராஜு) தியாகராஜனோடு, (யாடிந மாட) பேசின வார்த்தை....

## ஸரஸ ஸாம தா$^3$ந

ராகம்: காபிநாராயணி] [தாளம்: தேசாதி

ஸரஸமான ஸ்ரீராமனே! ஸாமம், தானம், பேதம், தண்டம் என்கிற நாலு உபாயங்களையும் நன்றாக அறிந்தவனே! சிவபக்தியில் சிறந்தவர்களில் சிரேஷ்டனான ராவணன், உன் மகிமையை அறியாமல் போனானே! அவனுக்கு ஹிதமான வார்த்தைகளை எவ்வளவோ சொன்

ணுய். அவனுக்கு அயோத்தியையே கொடுப்பதாகவும் சொன்ணுய். சரணம் அடைந்த அவனுடைய தம்பிக்கு ராஜ்யத்தைக் கொடுத்து ராக்ஷஸர்களை வதம் செய்தாய். உனக்கு நிகரான தெய்வம் யார்? என்னைக் காப்பாற்று.

ப. ஸரஸ ஸாமதா³ந பே⁴த³த³ண்ட³ சதுர
ஸாடி தை³வ மெவரே ப்³ரோவவே (ஸரஸ)

அ. பரமஶாம்ப³வாக்³ ரேஶருண்ட³கு³சு
ப³ல்கு³ ராவணுடு³ தெலிய லேக போயே (ஸரஸ)

ச. ஹிதவு மாடலெந்தோ பா³கா ப³ல்கிதிவி
ஶதமுகா³ நயோத்³ய நித்து நம்டிதிவி
நத ஸஹோத³ருநி ராஜுசேஸி ராக
ஹதமு ஜேஸிதிவி த்யாக³ராஜநுத (ஸரஸ)

**பதவுரை:**

(ஸரஸ) ஸரஸமுடையவனே; (ஸாம தாந பேத தண்ட) ஸாமம், தானம், பேதம், தண்டம் என்ற நாலு உபாயங்களிலும், (சதுர) தேர்ச்சியுடையவனே; (ஸாடி தெய்வமு எவரு) உனக்குச் சரியான தெய்வம் யார்? (ப்ரோவவே) காப்பாற்றுவாய்; (பரம ஶாம்பவ) சிவபக்தியில் சிறந்தவர்களில், (அக்ரேஶருண்டகுசு) தலைமையானவனென்று, (பல்கு) சொல்லப்படும், (ராவணுடு) ராவணன், (தெலிய லேக போயந்) அறியாமல் போனுன்; (த்யாகராஜநுத) ............, (ஹிதவு மாடலு) இதமான வார்த்தைகளை, (எந்தோ) எவ்வளவோ, (பாகுகந் பல்கிதிவி) நன்ருய்ச் சொன்ணுய்; (ஶதமுகான் அயோத்யந்) சதமாய் அயோத்தியை, (இத்து நம்டிதிவி) கொடுப்பேன் என்ருய்; (நத ஸஹோதருநி) வணங்கிய தம்பியை, (ராஜு சேஸி) அரசனுக்கி, (ராக ஹதமு சேஸிதிவி) அரக்கர்களை நாசம் செய்தாய்.

## எவரி மாட விந்நாவோ?

*ராகம்: காம்போதி]* *[தாளம்: ஆதி*

*யார் பேச்சைக் கேட்டாயோ? வரமாட்டாயோ? இங்கேதான் இல்லையோ, அம்மா! ரிஷிகள், மனிதர்கள் இவர்களுடைய நூல்களில் இந்த அதிசயத்தைக் காண வில்லையே! நீ பக்தபராதீனன் என்பது சரியல்லவோ? பரமபாகவதர்கள் உனது அம்சமெனவும், நீ அபார மான மகிமையுள்ள தெய்வம் என்றுமே நம்பியிருந்*

தேன்: சாத்துவிக சித்தத்துடன் உன்னைப் போற்றி வந்தேன். நீ உண்மை தவறுதவன் என்றும் நம்பினேன்; ஆயினும் உன் கிருபை எனக்குக் கிடைக்கவில்லையே!

ப: எவரிமாட விந்நாவோ ராவோ
இந்து$^3$லேவோ ப$^4$ளி ப$^4$ளி

அ: அவநிலோ நார்ஷேய பௌருஷேய
மந்தி$^3$ சோத்$^3$ய மெருக$^3$லேநய்ய

ச: ப$^4$க்த பாராதீ$^4$நு ட$^3$நுசு
பரம பா$^4$க$^3$வதுல
வ்யக்தருபுடை$^3$ பலிகிந முச்சட
யுக்த மநுசு யும்டி

ஶக்திக$^3$ல மஹாதே$^3$வுடு$^3$ நீவநீ
ஸந்தோஷமுந நும்டி
ஸத்த சித்துட$^3$கு த்யாக$^3$ராஜநுத
ஸத்ய ஸம்து$^3$ட$^3$நு கொம்டிநிலலோ—

பதவுரை:

(எவரி மாட விந்நாவோ) யார் வார்த்தையைக் கேட்டாயோ? (ராவோ) வரமாட்டாயோ? (இந்து லேவோ) இங்கு இல்லையா? (பளி பளி) மிகவும் நல்லது; (அவநிலோநு) இவ்வுலகத்தில், (ஆர்ஷேய பௌருஷேய மந்தி) ரிஷிகளாலும் மனிதர்களாலும் செய்யப்பட்ட நூல்களில், (ஈ சோத்யமு) இந்த ஆச்சரியத்தை, (எரு கலேநய்ய) அறியேன் ஐயா; (பக்த பராதீநுடு அநுசு) பக்தர்களுக்குக் கட்டுப்பட்டவனென்று, (பரமபாகவுதுலு) பரம பாகவதர்களுடைய, (வ்யக்தருபுடை) ப்ரத்யக்ஷ ரூபத்தை எடுத்து, (பல்கின முச்சட) நீ சொன்ன விருத்தாந்தம், (யுக்தமநுசு நும்டி) யுக்தம் என்றிருந்தேன்; (சக்திகல மஹாதேவுடு நீவு அநி) சக்தி மகாதேவன் நீ யென்று, (ஸந்தோஷமுந நும்டி) சந்தோஷமாயிருந்தேன்; (ஸத்த சித்துடகு த்யாகராஜநுத) சாத்துவிகமான சித்தத்தையுடைய தியாகராஜனால் போற்றப்பட்டவனே; (ஸத்யஸம்துடநுகொம்டிநி) சத்தியசந்தன் என்று எண்ணினேனே; (இலலோ) இப்புவியில்...

## மாஜாநகி செட்டப[3]ட்டக[3]

ராகம்: காம்போதி] [தாளம்: ஆதி

ஸ்ரீமத் ராமாயணத்தை ஸீதாபிராட்டியின் மகிமையைக் காட்டும் புராணமாகவும் சொல்வதுண்டு (ஸீதாயா: சரிதம் மஹத்). சீதையைக் கைபிடித்து மணந்ததால்தான் உனக்கு ராவணனைக் கொன்றவன் எனும் கீர்த்தி உண்டாயிற்று. அந்தத் தேவி பலவிதமான கஷ்டங்களுடன் உன்னோடு வனம் சென்று, (உன்னைப் பிரிந்து) அசோக வனத்தில் பலவித இன்னல்களையும் பொறுத்துக்கொண்டு ராவணனைச் சபித்துக் கொல்லாமல் உனக்கு ராவணனைக் கொன்றவன் என்ற கீர்த்தியைக் கொடுத்தாளல்லவா?

ப. மாஜாநகி செட்டப[3]ட்டக[3]—மஹராஜவைதிவி
ராஜராஜ வர ராஜீவாக்ஷ விநு (மா)

அ. ராவணாரி யநி ராஜில்லு கீர்த்தியு (மா)

ச. காநகேகி[3] யாஜ்ஞ மீரகமாயா
காரமுநிசி ஶிகி[2] செம்தநே யும்டி[3]
தா[3]நவுநி வெம்ட நேசநி
யசோகதருமூலந்நும்டி[3] (மா)

வாநிமாடலகு கோ[3]பகி[3]ம்சி
கம்டவதி[4]யிம் சகநேயும்டி[3]
ஸ்ரீநாயக! யஶமு நீகே கல்க[3]
ஜேய லேதா[3]? த்யாக[3]ராஜ பரிபால (மா)

### பதவுரை:

(மா) எங்களுடைய, (ஜாநகி) சீதாதேவியின், (சட்டந்) கையை, (பட்டகந்) பிடிக்கவே, (மஹாராஜவு) மகாராஜனாக, (ஐதிவி) ஆனாய்; (ராஜராஜ வர) சக்கரவர்த்திகளில் சிறந்தவனே; (ராஜீவாக்ஷ) தாமரை இதழ் போன்ற கண்களை உடையவனே; (விநு) கேள்; (ராவணாரி அநி) ராவணனுடைய பகைவனென்று, (ராஜில்லு பிரகாசிக்கின்ற, (கீர்த்தியுந்) கீர்த்தியும், (காநகு ஏகி) காட்டிற்குச் சென்று, (ஆஜ்ஞ மீரக) கட்டளையை மீறுமல்), (மாயாகாரமு உநிசி) மாயா ரூபத்தை அடைந்து, (ஶிகிசெம்தநே உம்டி) அக்கினியின் மருங்கே இருந்து, (தாநவுநிந்) அரக்கனாகிய ராவணனுடைய

(வெம்டநேசநி) பின் சென்று, (அசோக தருமூலமுநந்) அசோக மரத்தடியில், (உம்டி) இருந்து, (வாநிமாடலகு) அவனுடைய வார்த்தைகளுக்கு, (கோபகிம்சி) கோபம் செய்து, (கம்டந்) கண்ணால், (வதியிம்சகநே உம்டி) ராவணனைக் கொல்லாமலிருந்து. (ஸ்ரீ நாயக) லக்ஷ்மியின் மணவாளனே! (த்யாகராஜ பரிபால) தியாகராஜனை நன்றாகப் பரிபாலனம் செய்பவனே! (யஶமு) கீர்த்தி, (நீகே) உனக்கே, (கல்கந் சேய லேதா) உண்டாகும்படி செய்யவில்லையா?

## லேகநா

ராகம்: அஸாவேரி] [தாளம்: ஆதி

ஸ்ரீ ராமபட்டாபிஷேக படத்தில் ஸ்ரீ ராமபிரானைச் சுற்றிப் பலர் இருப்பதைக் கண்டு களித்து, இவர்களுடைய ராமப் பிரேமை எப்படி எப்படியென ஊகித்துப் பாடிய கீர்த்தனம் போலும்.

ப. லேகநா நிந்நு ஜுட்டுகொந்நாரு
ஏகஹ்ருத³யுலை நித்யாநந்த³மு (லே)

அ. ஸ்ரீகர கருணாஸாக³ர நிருபம
சிந்மயாஶ்ரித சிம்தாமணி நீயெட³ (லே)

ச. ஸௌந்த³ர்யமுலலோ ஸு̄க³மு ஸீதம்மகு
ஸௌமித்ரிகி கநுல ஜாட³ல ஸு̄க²மு
ஸு̄ந்த³ரமுக²முந ஸு̄க³மு ப⁴ரதுநிகி
ஸு̄ஜ்ஞாநரூபமுந ஸு̄க²மு ரிபுக்⁴நுநிகி
சரணயுக³முநந்து³ ஸு̄க² மாஞ்ஜநேயுநிகி
வரகுண த்யாக³ராஜ வரதா³நந்த³மு (லே)

### பதவுரை:

ஸ்ரீகர, கருணா ஸாகர நிருபம) ஐசுவரியத்தைக் கொடுப்பவனே; கருணைக் கடலே; இணையில்லாதவனே; (சிந்மய) ஞான ஸ்வரூபியே; (ஆஶ்ரித சிம்தாமணி) ஆசிரயிப்பவர்களுக்குச் சிந்தாமணி போன்றவனே! (நீயெட) உன்னிடத்தில், (நித்யாநந்தமு லேகநா) நித்தியானந்தமில்லாமலா, (ஏகஹ்ருதயுலை) ஒரே உள்ளமாக, (நின்னு ஜுட்டு கொந்நாரு) உன்னைச் சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள்; (ஸீதம்மகு) ஸீதாபிராட்டிக்கு, (ஸௌந்தர்ய

மூலலோ ஸுகமு) உன் அழகில் சுகம்; (ஸௌமித்ரிகி) லக்ஷ்மணனுக்கு, (கநுல ஜாடலோ ஸுகமு) உன் கண் ஜாடையில் (ஆஜ்ஞாபிப்பதில்) சுகம்; (ஸுந்தரமுக முந ஸுகமு) திருமுக மண்டலத்தில் சுகம், (பரதுநிகி) பரதனுக்கு; (ஸுஜ்ஞாந ரூபமுந ஸுகமு) மங்களகர மான பகவானுடைய ஞானத்தில் சுகம், (ரிபுக்நுநிகி) சத்ருக்னனுக்கு; (சரணயுகமுநர்து) திருவடி இரண்டி லும், (ஆஞ்ஜநேயுநிகி ஸுகமு) ஆஞ்சநேயருக்குச் சுகம்; (வரகுண) உத்தம குணங்களுள்ளவனே, (த்யாகராஜ வரத) தியாகராஜனுக்கு வரங்களை அளிப்பவனே! (ஆநந்தமு லேகநா) ஆனந்தமில்லாமலா?....

## நகு$^{3}$மோமு

ராகம்: ஆபேரி] [தாளம்: ஆதி

ரகு குலத்தில் சிறந்தவனே; உன்னுடைய மந்த ஹாஸமுள்ள முகத்தைத் தரிசிக்காததால் எனக்குள்ள துக்கத்தை அறிந்து என்னைக் காப்பாற்றக் கூடாதா? கோவர்த்தன கிரியைத் தாங்கியவனே; உன் பரிஜனங் கள் உனக்குச் சரியான வார்த்தைகளைச் சொல்ல வில்லையா? பக்ஷிராஜனான கருடன் உன் உத்தரவுப்படி வரமாட்டானோ? உனது இருப்பிடத்திற்கு இந்தப் பூமி அதிக தூரம் என்கிறானோ? என்னால் இனிப் பொறுக்க முடியாது; என்னைக் காப்பாற்று.

ப. நகு$^{3}$மோமு க$^{3}$நலேநி நாஜாலி தெ$^{3}$லிஸி
நந்நு ப்$^{3}$ரோவக ராத$^{3}$! ஸ்ரீரகு$^{4}$வர நீ (ந)

அ. நக$^{3}$ராஜு த$^{4}$ர நீது$^{3}$ பரிவாருலெல்ல
ஒகி$^{3}$ போ$^{3}$த$^{4}$ந ஜேஸேவாரலுகா$^{3}$ரே யிடுலுண்டு$^{3}$
து$^{3}$ரே (ந)

ச. க$^{2}$க$^{3}$ராஜு நீயாநதி விநிவேக$^{3}$ சநலேடோ$^{3}$
க$^{3}$க$^{3}$நாநி கிலகு ப$^{3}$ஹு தூ$^{3}$ரம் ப$^{3}$நிநாடோ$^{3}$
ஜக$^{3}$மேல பரமாத்ம எவரிதோ நே மொரலிடு$^{3}$து$^{3}$
வக$^{3}$ஜூபகுதாளநு$^{3}$ நந் நேலுகோர த்யாக$^{3}$ராஜ
நுத (ந)

### பதவுரை:

(ஸ்ரீரகுவர) ரகு குலத்தில் சிறந்தவனே; (நகு மோமு) சிரித்த முகத்தை, (கநலேநி நாஜாலிந்) தரிசிக்கர

ததால் உண்டான என் துக்கத்தை, (தெலிஸி) அறிந்து, (நந்நுந்) என்னை, (ப்ரோவகந் ராதா) கடாக்ஷிக்கக் கூடாதா, (நகராஜு தர) கோவர்த்தன கிரியை எடுத்த வனே! (நீது பரிவாரமு எல்லந்) உன் பரிஜனங்கள், (ஒகிந்) கிரமமாய், (போதநஜேஸேவாரலு) போதிக்கிற வர்கள், (காரே) அல்லேயோ, (எவரிதொந்) யாரோடு, (மொரலிடுது) முறையிட்டுக்கொள்வேன்? (இடுலு உம்டுதுரே) அப்படி இருப்பார்களா? (ககராஜு) கருடன், (நீயாநதி விநி) உன் உத்தரவைக் கேட்டு, (சநலேடோ) போகமாட்டானு? (ககநம்புகந்) ஆகாயத்திற்கும் (வைகுண்டத்திற்கும்), (கிலகுந்) பூமிக்கும், (பஹு தூரம்பு) அதிக தூரமென்று, (அநிநாடோ) என்று சொன்னனு? (ஜகமேல பரமாத்மா) உலகத்தையெல்லாம் காத்து ரக்ஷிப்பவனே! (பகஜூபகு) உன் தந்திரத்தைக் காட்டவேண்டாம்; (தாளநு) சகிக்கமாட்டேன்; (நந்நுந்) என்னை, (ஏலுகோரா) காப்பாற்றிக்கொள்ளப்பா; (த்யாகராஜநுத)....................

## ஸீதாபதி நாமநஸு ந

ராகம்: கமாஸ்] [தாளம்: ஆதி

ஸ்ரீராமா, நீ முன் ஆஞ்ஜநேயனுக்கு அளித்த வாக்குகளெல்லாம் சித்தாந்தமாக எண்ணி உன்னைப் பிரார்த்திக்கும் என்மீது அன்பு வைத்துப் பெரிய மனசு பண்ணி உன் திவ்ய ஸேவையைக் காட்டி, 'உனக்கு ஒரு விதமான பயமுமில்லை' என்று சொல்லுமையா.

ப. ஸீதாபதி நாமநஸு ந
ஸித்[3]தா[4]ந்தமநி யுந்நாநுரா

அ. வாதாத்மஜாது[3]ல செம்தநே
வர்ணிம்சிந நீ பலுகலெல்ல

ச. ப்ரேமஜூசி நாபை, பெத்[3]த[3] மநஸு ஜேஸி
நீமஹிம லெல்ல நிம்டா[3]ரஜூபி
ஈமஹிநி ப[3]யமேடி கநந்நமாட
ராமசந்த்[3]ர த்யாக[3]ராஜவிநுத

பதவுரை:

(ஸீதாபதி) சீதாபதியே! (வாதாத்மஜாதுல செம்தநே வர்ணிம்சின நீ பலுகு லெல்ல) மாருதி முதலிய

வர்களுடைய முன்னிலையில் நீ வர்ணித்த வார்த்தைகளெல்லாம், (ஸித்தாந்தமநி) சித்தாந்தமென்று, (நாமநஸு௲ந உந்நாநுரா) என் மனசில் எண்ணிக்கொண்டிருக்கிறேன்; (ராமசந்த்ர த்யாகராஜ விநுத) ராமசந்திரனே! தியாகராஜனுல் பூஜிக்கப்பட்டவனே! (ப்ரேம ஜூஸி) உனக்கு என்னிடத்திலுள்ள அன்பைக் காட்டி, (நாபை பெத்த மநஸு௲ ஜேசி) என்னிடத்தில் பெரிய மனசு பண்ணி, (நீ மஹிமலெல்ல நிம்டார ஜூபி) உன் மகிமைகளைப் பூரணமாகக் காட்டி, (ஈமஹினி பயமு ஏடிகநந்நமாட) இந்த உலகத்தில் உனக்குப் பயமென்ன என்ற வார்த்தை....

## நிதி⁴ சால ஸு௲க²மா

ராகம்: கல்யாணி] [தாளம்: சாபு

தஞ்சாவூர் அரசரின் அரண்மனைக்கு வந்து பாடி ஸம்மானம் பெற விரும்பாமல் இந்தக் கீர்த்தனத்தைச் செய்ததாகத் தெரிகிறது. தனம் விசேஷமா, ராம பஜனை விசேஷமா என்று தர்க்கித்து, ராம பஜனையே சுகமென்று பாடியிருக்கிறுர்.

ப. நிதி⁴ சால ஸு௲கமா ராமுநி ஸந்
நிதி⁴ ஸேவ ஸு௲க²மா—நிஜமுக³ப³ல்கு மநஸா

அ. த³தி⁴ நவநீதக்ஷீரமுலு ருசோ—தா³ஶரதி⁴
த்⁴யாநப⁴ஜந ஸு௲தா⁴ ரஸமு ருசோ

ச. தம ஶம மநு க³ங்கா³ ஸ்நாநமு ஸு௲க²மா கர்த்³
த³ம து³ர்விஷய கூப ஸ்நாநமு ஸு௲க²மா
ஸு௲மதி த்யாக³ராஜநுதுநி கீர்த்தந ஸு௲க²மா?

### பதவுரை:

(மநஸா) மனமே, (நிதிசால ஸு௲கமா) பணம் மிகவும் சுகத்தைத் தருமா? (ராமுநி ஸந்நிதி ஸு௲கமா) ராமனுடைய ஸந்நிதி சுகத்தைத் தருமா? (நிஜமுக பல்கு) உண்மையைச் சொல்லு; (ததி நவநீத க்ஷீரமுலு) தயிர், வெண்ணெய், பால் முதலியவை, (ருசோ) ருசியோ? (தாஶரதி த்யாந பஜந) தாஶரதியின் தியான பஜனையான, (ஸு௲தா ரஸமு ருசோ) அமிர்த ரஸம் ருசியோ? (தமஶம) பாபத்தைப் போக்கும், (கங்கா ஸ்நாநமு ஸு௲கமா) கங்கா ஸ்நாநம் சுகமா? (கர்த்தம துர்விஷய)

இந்திரிய சுகமாகிய துர்க்கந்தமான, (கூபஸ்நாநமு ஸுகமா) கிணற்று ஸ்நாநம் சுகமா? (மமத பந்தந யுத) அகங்காரமுள்ள, (நரஸ்துதி ஸுகமா) மனிதர்களைப் புகழ்வது சுகமா? (ஸுமதி த்யாகராஜநுதுநி கீர்த்தந) நல்ல புத்தியை உடைய தியாகராஜனுல் புகழப்பட்ட ராமகீர்த்தனம் (சுகமா?)....

## சக்கநி ராஜமார்க$^3$மு

ராகம்: கரஹரப்ரிய] [தாளம்: ஆதி

கண்ணுக்கு மிகவும் அழகானவனும், சிவபிரானே ஜபிக்கும் நாமமுள்ளவனுமான ஸாகேதராமனிடம் பக்தி வைக்கும் உத்தமமான வழி இருக்கும்போது சந்துகளில் புகுவதுபோல் மற்றத் தெய்வங்களை ஏன் உபாஸிக்க வேண்டும்?

ப. சக்கநி ராஜமார்க$^3$முலுண்ட$^3$க$^3$
ஸந்து$^3$ல தூ$^3$ரநேல ஓ மநஸா (ச)

அ. சிக்கநி பாலு மீக$^3$ட$^3$ யும்ட$^3$க$^3$
சீயநு க$^3$ங்கா$^3$ ஸாக$^3$ர மேல (ச)

ச. கம்டிகி ஸுந்த$^3$ர தரமகு$^3$ ரூபமே முக்
கம்டி நோட செலகே$^3$டு நாமமே த்யாக$^3$ரா
ஜும்டநே நெல கொந்நதி$^3$ தை$^3$வமே யிடு
வம்டி ஸ்ரீ ஸாகேதராமுநி ப$^4$க்தியநே— (ச)

### பதவுரை:

(கம்டிகின் ஸுந்தரதரமகு) கண்ணுக்கு அழகு வாய்ந்த, (ரூபமே) ரூபமே; (மும்கம்டி நோடந்) சிவபிரான் வாயில், (செலகேடு நாமமு ஏ) எப்போதும் ஜபிக்கும் நாவும், (த்யாகராஜுநிம்டந்ஏ) தியாகராஜன் வீட்டிலேயே, (பாகுகந்) நன்ருக, (நெலகொந்ந தைவமு ஏ) கோயில் கொண்ட தெய்வம், (இடுவம்டி) இப்படிப்பட்ட, (ஸாகேத ராமுநி) ஸ்ரீ அயோத்தியா ராமனுடைய, (பக்தி அநு) பக்தியாகிற, (சக்கநி ராஜமார்கமுலுண்டக) நல்ல ராஜமார்க்கம் இருக்கும்போது, (ஓ மநஸா) ஏ மனமே, (சந்துலந் தூரந் ஏல) நீச மார்க்கங்களில் ஏன் போகவேண்டும்? (சிக்கநி பாலு மீகடயும்டக) ஏட்டுடன் நல்ல பால் இருக்கும்போது, (சீயநு) நிந்திக்கத் தக்க, (கங்காஸாகரலேல) கள் எதற்கு? .....

## நெநரும்சி நாநு

ராகம்: மானவி] [தாளம்: ஆதி

இந்தக் கலிகாலத்தில் வார்த்தைகளைக் கற்றுக் கொண்டு பிரியமான பெண்களையும் பிள்ளைகளையும் போஷித்துக் கல்நெஞ்சுடன் பேசுபவனில்லை நான். உன்னுடைய தாஸனென்று பெரிய பாவங்களையும் போக்கக் கூடிய உன் பாதங்களையே மனத்தில் வைத்திருக்கிறேனே!

ப. நெநரும்சி நாநு அந்நிடிகி
நிதா³ஸுட³நி நேநு நீது³பை (நெ)

அ. க⁴நாக⁴ ஜீமூதாஶுக³ ஜலதி⁴
கம்பீ⁴ர நீபாத³ மூலபை (நெ)

ச. கலிலோ மாடலு நேர்சுகொநி
காம்தலநு தநயுலப்³ரோசுடகே
ஶிலாத்முடை³ப³ல்க நேரநுர,
ஶ்ரீத்யாக³ராஜாப்த நீயெட³. (நெ)

### பதவுரை:

(கநஅக) பெரிய பாவமாகிய, (ஜீமுத) மேகத்துக்கு, (ஆஶுக) காற்றைப்போன்றவனே, (ஜலதி கம்பீர) சமுத்திரத்தைப் போல் கம்பீரமானவனே, (நீ பாதமுலபைந்) உன் பாதங்களில், (நெநரு உம்சிநாநு) மனத்தை வைத்திருக்கிறேன், (அந்நிடிகிந் எல்லாவற்றிற்கும், (நிதாஸுடநு) உன் தாஸனை, (நீதுபை) உன் பேரில், (நெநரும்சிநாநு) ................, (கலிலோந்) இந்தக் கலிகாலத்தில், (மாடலந் நேர்சுகொநி) வார்த்தைகளைக் கற்றுக்கொண்டு, (காம்தலுந் தநயுலந்) பெண்களையும் பிள்ளைகளையும், (ப்ரோசுடகுந்) காப்பாற்றுவதற்கு, (ஶிலாத்முடை) கல் மனமுடையவனாக, (பலுகந்நேர நுர) பேச அறியேனப்பா; (த்யாகராஜாப்த) தியாகராஜனுக்கு ஆப்தனான ராமா, (நீயெட) உன் பேரில் ......

## பக்கல நிலப³டி³

ராகம்: கரஹரப்ரிய] [தாளம்: த்ரிபுடை

சீதாபிராட்டியும் லக்ஷ்மணனும் இராமபிரானின் இருபக்கமும் நின்றுகொண்டு சேவை செய்வதைத் தமக்குத் தெரிவிக்கக்கூடாதா என்று பிரார்த்திக்கிறார்.

ப. பக்கல நிலப³டி³கொலிசேடி
முச்சட பா³க தெல்பராதா³ (பக்)

அ. சுக்கல ராயநிகே³ரு மோமுக³ல
ஸுத³தி ஸீதம்ம ஸௌமித்ரி ராமுநிகிரு (பக்)

ச. தநுவுசே வந்தந மொநரிஞ்சு சுந்நாரா
சநவுந நாமகீர்த்தந ஸேயுசுந்நாரா
மநஸுந த³லசி மைமரசியுந்நாரா
நெநரும்சி த்யாக³ராஜுநிதோ ஹரிஹரிமீரிரு. (பக்)

### பதவுரை:

(சுக்கலராயநி) நட்சத்திரங்களின் அரசஞன சந்திரனை, (கேரு) பழிக்கும் (மோமுகல) முகமுள்ள, (ஸுததி) அழகிய பற்களைக்கொண்ட, (ஸீதம்ம) சீதையே, (ஸௌமித்ரி) லட்சுமணனே, (ராமுநிகி) ராமனுக்கு, (இருபக்கலன்) இரு பக்கமும், (நிலபடி) நின்றுகொண்டு, (கொலிசே) சேவை செய்யும், (முச்சட) அழகை (பாக) நன்ருக, (தெல்பராதா) தெரிவிக்கக்கூடாதா? (தநுவுசே வந்தநமு) உடலால் நமஸ்காரம் (ஒநரிஞ்சிசுந்நாரா) செய்கிறீர்களா? (சநுவுந) அன்புடன் திருநாமத்தை, (நாமகீர்த்தநஸேயுசுந்நாரா) நாமபஜனை செய்கிறீர்களா? (தலசி) நினைத்து, (மைமரசியுந்நாரா) உடலையே மறந்து நிற்கிறீர்களா? (ஹரிஹரி) என்ன செய்வேன்? (நெநருஞ்சி) இரக்கம் வைத்து (தியாகராஜுநிதோ) தியாகராஜனிடம் (மீரிரு) நீங்கள் இரு (பக்கங்களில்)..

## அப்ப ராமபக்⁴தி

ராகம்: **பந்துவராளி**] [தாளம்: **ரூபகம்**

'ராமபக்தி எவ்வளவு பெரியது! மனப்போக்குகளைத் தடுத்துக் கண்ணிமைகளைப்போல் காப்பாற்றும் பக்தி விசேஷத்தினுல் எவரெவர் என்ன செய்திருக்கிருர்கள் என்று இக்கீர்த்தனத்தில் விவரிக்கிருர்.

ப. அப்ப ராம ப⁴க்தி எந்தோ கெ³ாப்பரா; மா (அ)

அ: த்ரிப்படலனு தீர்ச்சி கன்டி
ரெப்ப வலெனு காசு மா (அ)

ச. 1. லக்ஷ்மி தே$^{3}$வி வலசுஞ
லக்ஷ்மணுண்டு$^{3}$ கொலுசுஞ?
ஸௌக்ஷ்ம பு$^{2}$த்$^{3}$தி$^{4}$கல ப$^{4}$ரதுடு$^{3}$
ஜூசிஜூசி ஸொலயுஞ? (அ)

2. ஶப$^{3}$ரி யெங்கி$^{3}$லினிச்சுஞ
சந்த்$^{3}$ர த$^{4}$ருடு$^{3}$மெச்சுஞ?
அப$^{3}$ல ஸ்வயம் ப்ரப$^{4}$கு தை$^{3}$வ
மசலபத$^{3}$வினிச்சுஞ? (அ)

3. கபி வாரிதி$^{4}$ தா$^{3}$டுஞ
கலிகிரோட க$^{3}$ட்டுஞ?
அபராதி$^{4}$ த்யாக$^{3}$ராஜுகா
நந்த$^{3}$மு ஹெச்சுஞ? (அ)

## பதவுரை:

(மாயப்ப) என்னப்பன், (ராம பக்தி) ராமனுடைய பக்தியானது, (எந்தோ) மிகவும், (கொப்பரா) பெருமையுள்ளதடா! (த்ரிப்படலனு) அலைச்சலை (மன உளைச்சலை) (தீர்ச்சி) நீக்கி, (கன்ட்டின்) கண்ணை, (ரெப்பவலெனு) இமை போல், (காகுன்) காக்கும்; (அப்படி இல்லாவிட்டால் லக்ஷ்மி தேவி சீதையாய் வந்து) லட்சுமி தேவி, (வலசுஞ) ஆசை கொள்வாளா? (லக்ஷ்மணுண்டு) லட்சுமணன், (கொலுசுஞ) சேவை செய்வானு? (ஸௌக்ஷ்ம புத்திகல) கூர்ந்த அறிவுள்ள, (பரதுடு) பரதன், (ஜூசிஜூசி) (ராமனைப்) பார்த்துப் பார்த்து, (ஸொலயுஞ) மயங்குவானு? (சபரி) வேடப்பெண், (எங்கிலின்) எச்சிலை, (இச்சுஞ) கொடுப்பாளா? (சந்த்ரதருடு) சந்திரசேகரனான ஈசன், (மெச்சுஞ) புகழ்வானு? (அபல) அபலையான, (ஸ்வயம் ப்ரபகு) சுயம்பிரபைக்கு, (தைவமு) தெய்வம், (அசல பதவின்) அசைவற்ற பதவியை, (இச்சுஞ) கொடுக்குமா? (கபி) குரங்கு, (வாரிதி) கடலை, (தாடுஞ) தாண்டுமா? (கலிகி) ஒரு பெண் (யசோதை கண்ணனை), (ரோட) உரலில், (கட்டுஞ) கட்டுவாளா? (அபராதி) குற்றம் செய்த, (த்யாகராஜுகு) தியாகராஜனுக்கு, (ஆநந்தமு) ஆனந்தம், (ஹெச்சுஞ) அதிகரிக்குமா?

## எவரநி நிர்ணயிஞ்சிரிரா

ராகம்: தேவாம்ருதவர்ஷிணி] [தாளம்: ஆதி

''சிவமந்திரத்தில் 'ம' முக்கிய எழுத்து; மாதவ மந்திரத்தில் 'ரா' முக்கியமானது. இந்த விவரம் தெரிந்து கொண்ட (இவ்விரண்டு எழுத்துக்களும் சேர்ந்தது 'ராம') மகான்களை நமஸ்காரம் செய்கிறேன். கல்யாண குணங்கள் யாவுமுள்ள தியாகராஜனுல்,(சிவனுல்) நன்ருய்ப் போற்றப்பட்டவனே'' என்கிருர். (சிவமந்திரமாகிய நம: சிவாய என்பதில் 'ம' என்ற எழுத்தை எடுத்துவிட்டால் அமங்கலமாகும். மாதவ மந்திரத்தில் 'ஓம் நமோ நாராயணுய' என்பதில் 'ரா' வை எடுத்தாலும் அப்படியே. இவ்விரண்டெழுத்துக்களும் சேர்ந்தது 'ராம' நாமம்).

ப. எவரநி நிர்ணயிஞ்சிரிரா நிந்
நெட்லா ராதி³ம்சிரிரா நரவரு (எ)

அ. ஶிவுட³நோ மாத⁴வுட³நோ
கமலப⁴வுட³நோ பரப்ரஹ்மநோ— (எ)

ச. ஶிவமந்த்ரமுநகு மாஜீவமு மா
த⁴வ மந்த்ரமுநகு ரா ஜீவமு யீ
விவரமு தெ³லிஸிநகநுலகு ம்ரொக்கேத³
விதரணகு³ண த்யாக³ராஜவிநுத (எ)

### பதவுரை:

(நரவருலு) நரஶ்ரேஷ்டர்கள், (நின்னு) உன்னை, (நிர்ணயஞ்சிரா) நிச்சயித்தார்கள் அப்பா; (எட்லு) எப்படி, (ஆராதிஞ்சிரா) பூஜை செய்தார்கள்? (சிவுடநோ) சிவனென்ருே, (மாதவுடநோ) மாதவனென்ருே, (கமலபவுடநோ) பிரம்மா என்ருே, (பரப்ரஹ்மமநோ) பரப்ரஹ்மமே என்ருே, (நின்னு) உன்னை (எப்படிப் பூஜை செய்தார்கள்?)....(சிவமந்த்ரமுநகு) பஞ்சாக்ஷரத்திற்கு, (மாஜீவமு) 'மா' என்ற எழுத்து உயிர்; (மாதவ மந்த்ரமுநகு) அஷ்டாக்ஷரமந்த்ரத்துக்கு 'ர' என்னும் எழுத்து உயிர்; (ஈவிவரமு தெலிஸிந) இந்த விவரத்தை அறிந்த, (கநுலகு) பெரியவர்களுக்கு, (ம்ரொக்கெத) நான் வணங்குகிறேன்; (விதரணகுணு) உதாரகுணமுடையவனே! (த்யாகராஜவிநுத) த்யாகராஜனுல் துதிக்கப் பட்டவனே....

## ராம நீயெட³

*ராகம்:* **கரஹரப்ரிய]** *[தாளம்:* **தேஶாதி**

'*ஸ்ரீராமா! உன்னிடத்தில் பிரேமை இல்லாதவர்களுக்கு உன் நாமருசி தெரியுமா? பெண் வேஷம் போட்ட காமிக்குப் பதிவிரதையின் நடத்தை ஏதாவது தெரியுமா? அம்மாதிரியே, தனக்கு எது இதம் என்று தெரியாதவன் மற்றவனுக்கு உபதேசம் செய்யமுடியுமா? வேங்கைப் புலிக்குப் பசுத்தோலைப் போர்த்தால் குழந்தைக்குப் பால் கிடைக்குமா?' என்கிறார்.*

**ப.** *ராம நீயெட³ ப்ரேமரஹிதுலகு*
*நாமருசி தெ³லுஸுனா ஓஸீதா* *(ராம)*

**அ.** *காமிநி வேஷதா⁴ரிகி ஸாத்⁴வீநட³த*
*வேமைந தெ³லுஸுனா யாரீதிஸீதா* *(ராம)*

**ச.** *தந ஸௌக்²யமு தாநெருக³க யொருவலகு*
*தகு போ³த⁴ந ஸுக⁴மா*
*க⁴நமகு³ புலிகோ³ ரூபமைந*
*த்யாக³ராஜநுத ஶிஶுபாலு கல்கு³நா* *(ராம)*

**பதவுரை:**

*(ராமா)....., (நீயெட ப்ரேம ரஹிதுலுகு) உன்னிடம் பிரியமில்லாதவர்களுக்கு, (நாமருசி தெலுஸுனு) உன் பெயரின் இன்பம் தெரியுமா? (காமிநிவேஷதாரிகி) பெண் வேஷம் கொண்ட நடிகனுக்கு, (ஸாத்விநடதுலு) பதிவ்ரதையின் நடத்தை, (ஏமைந தெலுஸுனா) ஏதாவது தெரியுமா? (ஆரீதின்) அந்தமாதிரி, (தநஸௌக்யமு) தன் சௌக்கியத்தையே, (தாநு எருகக) தான் தெரிந்து கொள்ளாதவன், (ஒருலகு) மற்றவர்களுக்கு, (தகு போதந) சரியான உபதேசம் செய்தல், (ஸுகமா) பிரயோஜனப்படுமா? (கநமகு) பலம் அதிகமான, (புலி) ஒரு புலியானது, (கோரூபமைதே) பசுவேடம் போட்டுக் கொண்டால், (ஶிசு பாலு கலுகுநா) குழந்தைக்குப் பால் கிடைக்குமா?*

## எந்து³கு நிர்த³ய

*ராகம்:* **ஹரிகாம்போதி]** *[தாளம்:* **தேஶாதி**

'*பாவங்களைப் போக்குவதில் மேலான சக்தி உள்ளவனே! அணிப்பிள்ளையின் பக்தியில் ஆனந்தம் அடைய*

வில்லையா? சத்ருக்களையும் சிநேகிதர்களையும் இவ்வுலகில் சமமாகப் பார்ப்பவனே! தியாகராஜனிடம் ஏன் தயை இல்லை?' என்கிறார்.

ப. எந்து³கு நிர்த³ய எவருந்நாருரா (எ)

அ. இந்து நிபா⁴நந இநகுலசந்த்ந (எ)

ச. பரம பாவந பரமலாபக்⁴ந
நேபரதேஸி பாபவேகா⁴ஸு
உட³தப⁴க்திகநி உப்பதில்லக³ லேதா³
ஶத்ருலமித்ருல ஸமமுக³ ஜூசேநி
த⁴ரலோ நீவை த்யாக³ராஜுவை (எ)

பதவுரை:

(இந்து நிபாநந) சந்திரனைப்போல் முகமுள்ளவனே, (இநகுலசந்தந) சூரியவம்சத்திற்குச் சந்திரன்போல் குளிர்ச்சியுள்ளவனே, (எந்துகு நிர்தயா) என்பேரில் ஏன் தயையில்லை? (எவருந்நாருரா) எனக்கு யார் இருக்கிறார்கள்? (பரமபாவந) பரிசுத்தப்படுத்துபவனே, (பரமலாபக்ந) நல்ல மணம் வீசும் சரீரம் உள்ளவனே, (நே பரதேசி) நான் பரதேசி; (பாபவேகாஸு) என் துக்கத்தைப் போக்குவாயாக; (உடத பக்திகநி) ஓர் அணிலின் பக்தியைக் கண்டு (உப்பதில்லக லேதா) நீ சந்தோஷப்படவில்லையா? (சத்ருல மித்ருல ஸமமுக சூஸனி) சத்ருக்களையும் மித்ரர்களையும் சமமாகப் பாவிப்பவன் அல்லவா? (தரலோ நீவை) இவ்வுலகமே உன் மயம்தானே; (த்யாகராஜுவை) தியாகராஜன் பேரில்....(ஏன் தயை இல்லை?)

## எந்த வேடு³கொந்து³

ராகம்: ஸரஸ்வதி மனோஹரி] [தாளம்: தேஶாதி

'ஓ ராமா! என் கவலையைப் போக்கி என் அருகில் வருவதற்கு எவ்வளவு தாமதம்! நான் மனத்தில் உன்னைப் பார்க்கிற சுகமே சிறந்தது என்று எக்களித்து மிக நம்பினேன்' என்கிறார்.

ப. எந்த வேடு³கொந்து³ராக⁴வ
பந்தமேலரா ஓராக⁴வா (எம்)

அ. சிந்ததீர்சுட கெந்தமோடி³ரா
அந்தராத்மநா செந்தரானு நே (நெம்)

ச. சித்தமந்து³ நிந்நு ஜூசு ஸௌக்²யமே
உத்தமம்ப³நுசு நுப்பொங்கு³சுநு
ஸத்தமாத்ரமா சால நம்மிதிநி
ஸார்வ பௌ⁴ம ஸ்ரீத்யாக³ராஜநுத... (எம்)

**பதவுரை:**

(ராகவ).....(எந்த வேடுகொந்து) நான் எவ்வளவு வேண்டினாலும், (பந்த மேலரா) பிடிவாதமேன் ஐயா, (சிந்த தீர்சுடகு)என் கவலை ஒழிப்பதற்கு,(எந்த மோடிரா) எத்தனை பிகு? (அந்தராத்மநா) ஆத்மரூபனே, (நாசெந்தரானுதே) என்னிடம் வராதது,(சித்தமந்து) என் மனத்தில் (நிந்நுஜூசு ஸௌக்யமே) உன்னைத் தரிசிப்பதே சுகம்; (உத்தமம்புநுஸு உப்பொங்குசுநு) உத்தமம் என்று மகிழ்ச்சியடைகிறேன், (ஸத்தமாத்ரமா) ஸார்ரமானவனே, (சாலநம்மிதிநி) நிரம்ப நம்பினேன், (ஸ்ரீத்யாகராஜநுத) ஸ்ரீ தியாகராஜனால் துதிக்கப்பட்ட, (ஸார்வபௌம) ஸார்வபௌம....

## ராம கத²ா ஸுத⁴ா

ராகம்: மத்யமாவதி] [தாளம்: தேசாதி

ப. ராம கத²ா ஸுத⁴ா ரஸ பாந மொக
ராஜ்யமு ஜேஸுநே (ரா)

அ. ப⁴ாமாமணி ஜாநகி ஸௌமித்ரி
ப⁴ரதாது³ லதோ பூ⁴மி வெலயு ஸ்ரீ (ரா)

ச. த⁴ர்மாத் யகி²ல ப²லத³ மே மநஸா
தை⁴ர்யாநந்த³ ஸௌக்²யநிகேதநமே
கர்மப³ந்த⁴ ஜ்வலநாப்தி⁴ நாவமே
கலிஹரமே த்யாக³ராஜ விநுதுடகு (ரா)

**பதவுரை:**

(ராம) ஸ்ரீராமனுடைய (கதா) சரித்திரமென்கிற, (ஸுதா ரஸபாநமு) அம்ருதபானம், (ஒக ராஜ்யமு) ஓர் இராஜ்யம், (ஜேஸுநே) செய்யுமல்லவா? (பாமாமணி)

பெண்மணியாகிய, (ஜாநகி) சீதையோடும், (ஸௌமித்ரி) இலக்குமணனோடும், (பரதாதுலதோந்) பரதன் முதலியவர்களோடும், (பூமிந்) உலகின்கண் (வெலஸெநே) விளங்கினனே; (ஸ்ரீராமன் பூமியில் அவதரித்து விளங்கவில்லையா?) (தர்மாத்யகிலபலதமுஏ) (ஸ்ரீராமனுடைய சரித்திரம்) தர்மார்த்தகாம மோக்ஷம் என்கிற நான்கு புருஷார்த்தங்களைக் கொடுக்கக் கூடியதே; (தைர்யாநந்த ஸௌக்ய நிகேதநமு ஏ) தைரியம் ஆநந்தம் சுகம் என்பவற்றிற்கு இருப்பிடமே; (கர்மபந்த ஜ்வலநாப்தி நாவமே) ஊழ்வினைப் பிணியால் ஜ்வலிக்கிற சமுத்திரத்தைக் கடப்பதற்குத் தகுந்த தெப்பமே; (கலிஹரமுஏ) பாவங்களைப் போக்கடிக்கக் கூடியதே; (த்யாகராஜ விநுதுடகு) தியாகராஜனால் துதிக்கப்பட்ட, (ராமகதா ஸுதா.... சேயுநே) ஸ்ரீராமனுடைய கதாம்ருத பானம் ஓர் இராஜ்யம் செய்யுமே! ஸ்ரீ ராமபிரானுடைய சரித்திரமானது தர்மம் முதலிய பலங்களை அளிக்கக் கூடியது (அந்த அம்ருதபானம் ஓர் அரசாட்சியே புரியுமே)..

## ராம நிந்நே

ராகம்: ஹுஸேநி] [தாளம்: ஆதி

ராமபிரானின் பலவித குணாதிசயங்களை வருணித்துத் தாம் அவரையே நம்பியுள்ளதாக விவரிக்கிறார்.

ப. ராமா நிந்நே நம்மிநாநு நிஜமுக³ஸீதா

அ. காமஜநக கமநீயவத³நநநு காவவே காருண்யஜலதீ

ச. 1. ஸாரஸாமாதி³ வேத³ஸார ஸம்தத பு³த⁴
விஹார ராஜித முக்தா
ஹார கநக கேயூரத⁴ர ஸுகு³ண
பாராவார ஸுராராதி⁴ தபத³ (ரா)

2. தீ⁴ர ஸுஜந ஹ்ருத் பஞ்ஜரகீர நீபத³ பக்தி நா
கீர மத³ந ஸுந்த³ரா
கார தநுஜ ஸம்ஹார து³ஷ்டஜந
தூ³ர ரகு⁴குலோத்³தா⁴ரோத்³தா⁴ர (ரா)

3. ராஜராஜ வந்தி³த பூ⁴ஜா நாயக ஸுர-ஸ
மாஜ ஸ்ரீகர த்யாக³
ராஜ மாநஸ ஸரோஜ குஸுமதி³ந
ராஜ பங்திரத² ராஜ தநய ஸ்ரீ (ரா

### பதவுரை:

(ராமா) ஸ்ரீராமா, (நிந்நு) உன்னையே, (ஸீதாராமா) சீதைமணவாளா! (நம்மிநாநு) நம்பியிருக்கிறேன். (நிஜமுக) நிச்சயமாய், (காம ஜநக) மன்மதனைப்பெற்றவனே! (கமநீயவதந) மனோகரமான முகத்தையுடையவனே! (காருண்ய ஜலதீ) கருணைக்கடலே! (நநு) என்னை! (காவவே) காப்பாற்றுவாய் (ஐயனே)! (ஸார) சத்தாகியவனே! (ஸாமாதிவேதஸார) ஸாமாதியாயுள்ள நான்கு வேதங்களின் ஸாரமானவனே! (ஸம்தத) எப்பொழுதும், (புத) பெரியோர்களிடத்தில் (பக்தர்களிடத்தில்), (விஹார) விஹரிப்பவனே! (ராஜித முக்தா ஹார) ஒளிர்கின்ற முத்துமாலையை அணிந்தவனே! (கநக கேயூரதர) பொன்னாற் செய்த தோளணியை அணிந்தவனே, (ஸுகுண பாராவார) நற்குணக்கடலே, (ஸுர) தேவர்களால், (ஆராதித) பூஜை செய்யப்பட்ட, (பத) பாதங்களை யுடையவனே! (தீர) தீரனே! (ஸுஜந)! சாதுக்களுடைய, (ஹ்ருத்) மனமென்கிற, (பஞ்ஜர) கூட்டில் (வாசஞ்செய்யும்), (கீர) கிளியே (பைங்கிளியே)! (நீ) உன்னுடைய, (பதபக்தி) பாத பக்தியை, (நாகுந் ஈரா) எனக்குக் கொடப்பா; (மதந ஸுந்தராகாரா) மன்மதனைப்போன்ற அழகிய உருவமுடையவனே, (தநுஜ ஸம்ஹார) இராக்கதர்களைச் சங்கரிப்பவனே, (துஷ்டஜநதூர) துஷ்டர்கட்குத் தூரத்திலிருப்பவனே,(ரகுகுல) இரகுவம்சத்தை,(உத்தார) உத்தரித்தவனே! (ராஜராஜ வந்தித) இராஜாதிராஜர்களால் வந்திக்கப்பட்டவனே! (பூஜா நாயக) பூமிதேவியின் மகளாகிய சீதா நாயகனே! (ஸுர்ஸமாஜ) தேவர்களின் சமூகத்தையுடையவனே! (ஸ்ரீகர) ஸம்பத்தை அளிப்பவனே! (த்யாகராஜ) தியாகராஜனுடைய, (மாநஸ) மனமென்கிற. (ஸரோஜ குஸும) தாமரை மலருக்கு, (திநராஜ) சூரியனைப் போன்றவனே! (பங்திரத ராஜதநய) தசரதனுடைய குமாரனே! (ஸ்ரீராமா) ஸ்ரீராமா, (நிந்நே)..

## ராம நந்நு ப்[3]ரோவரா

ராகம்: ஹரிகாம்போதி] [தாளம்: ரூபகம்

'பிபீலிகாதி ப்ரஹ்மபர்யந்தம் ஸகல ஜீவராசிகளிலும் மூர்த்திகளிலும் அன்பு காட்டுபவனாய்,

பரம்பொருளாகிய நீ எல்லோரையும் காப்பாற்றுகிறுயே; என்னைமாத்திரம் காக்க வரவில்லையே' என்று வருந்துகிறுர்.

ப. ராம நந்நு ப்[3]ரோவரா
வேமகோ லோகாபி[4] (ராம)

அ. சீமலோ ப்[3]ரஹ்மலோ
ஶிவ கேஶவாது[3]லலோ
ப்ரேமமீற வெலுகு[3]சுண்டி[3]
பி[3]ருது வஹிம்சிந ஸீதா (ராம)

ச. மெப்புலகை கந்நதாவு
நப்பு ப[3]டக விர்றவீகி[3]
தப்பு பநுலு லேக யுண்டு[3]
த்யாக[3] ராஜ விநுத ஸீதா (ராம)

பதவுரை:

(லோகாபிராம) உலகத்திற்கெல்லாம் மனோகரமானவனே, (நந்நுந்) என்னை, (ப்ரோவந்) காப்பாற்றுவதற்கு, (ராவு ஏமகோ) வராததென்னையோ? (சீமலோந்) எறும்பிலும், (ப்ரஹ்மலோந்) பிரமனிலும், (ஶிவ) சிவனிலும், (கேஶவாதுலலோந்) கேசவாத்யவதாரங்களிலும், (ப்ரேமமீறந்) திருஉள்ளம் உவந்து, (வெலுரு சுண்டி) பிரகாசித்துக்கொண்டிருந்து, (பிருது) ஸர்வேஶ்வரன் என்கிற விருதை, (வஹிம்சிந) படைத்த, (ஸீதாராம) சீதைமணவாளா, (நந்நு)....; (மெப்புலகை) ஊரார் மெச்சிக்கொள்வதற்காக, (கந்நதாவு) கடன் படாமல், (வீர்றவீகி) சந்தோஷமடைந்து, (தப்புபநுலு) தர்மவிரோதமாகிய காரியங்கள், (லேகயுண்டு) இல்லாமலிருக்கிற, (த்யாகராஜவிநுத) தியாகராஜனுல் கொண்டாடப்பட்டவனே!

## ராமாபி[4]ராம

ராகம்: தர்பார்] [தாளம்: சாபு

'ராமபிரானே! உன்னையே கோரிப் பலவிதப் பணிவிடை நான் செய்திருக்க, நீ இரக்கமில்லாமல் வாது செய்கிறுயே; நீ என்னைக் காப்பாற்றவேண்டும்' என்கிறுர்.

ப. ராமாபி⁴ராம ரமணீய நாம
ஸாமஜரிபுபீ⁴ம ஸாகேத தா⁴ம (ரா)

ச. 1. வநஜலோசந நீவலந யலஸிதிநி
மநஸுந த³யலேது³ மல்லாடி³ ப²லமேமி (ரா)

அ. 2. மநஸு செலி நீகே மருலு கொந்நதி³கா³நி
சநுவுந ஜெயிப³ட்டி விநவு ரக்ஷிம்பவு (ரா)

3. கோரி கோரி நிந்நு கொ³லுவக³நீ³
தா³ரி வேறைநதி³ தா⁴த வ்ராலேமோ (ரா)

4. கமநீயமகு³ பாந்பு கா³விம்சிதி நந்து³
ரமியிம்பக நந்நு ரச்ச சேஸெத³வு (ரா)

5. தி³க்கு நீவநி நேநு தி³நதி³நமுநு நம்ம
எக்குவதக்குவலந்து³ ஏநஸெடு³கு³ணமேமோ (ரா)

6. நீகே த³ய புட்டி நீவு ப்³ரோவவலே
ராகேந்து³முக²² த்யாக³ ராஜவரத³ ஸ்ரீ (ரா)

**பதவுரை:**

(ராமா) ஸ்ரீ தேவியாகிய சீதைக்கு (அபிராம) மனோகரமானவனே! (ரமணீய நாம) மனத்தைச் சந்தோஷிக்கச் செய்யத்தக்க தாரகநாமத்தை உடையவனே! (ஸாமஜ) யானைக்கு (கஜேந்திரனுக்கு), (ரிபு) சத்ருவாகிய முதலைக்கு, (பீம) பயங்கரமானவனே! (ஸாகேத) அயோத்தியை, (தாம) வீடாக உடையவனே, (ராமா)..! (வநஜலோசந) கமல தளத்தைப்போன்ற கண்களுடையவனே! (நீவலந்) உன்னால், (அலஸிதிநி) சோர்ந்தேன்; (மநஸுநந்) உன்னுடைய மனத்தில், (தயலேது) தயை இல்லை; (மல்லாடி) மன்றாடி, (பலமு ஏமி) பயன் யாது? (ராமா)..! (மநஸுசெலி) என் மனமென்கிற பெண்மணி, (நீகே மருலு கொந்நதிகாநி) உன்மேல் காதல் கொண்டிருக்கிறளே யல்லாது வேறில்லை; (சநுவுநந்) பிரீதியோடு, (செயிபட்டி) கையைப் பிடித்து, (விநவு) அப்பெண்மணியின் குறைகளைக் கேட்க மாட்டாய்; (ரக்ஷிம்பவு) இரக்ஷிக்கவும் மாட்டாய், (ராமா)....!(கோரி கோரி) பிரார்த்தித்துப் பிரார்த்

தித்து, (நிந்நுந்) உன்னை, (கொலுவந்கந்) வழிபட்டிருக்க, (நீது) உன்னுடைய, (தாரி) வழி, (வேறு ஐநதி) வேறாயிற்று; (தாதவ்ராலு ஏமோ) பிரமனுடைய நியமனம் எப்படியோ? (ராமா).., (கமநீயமு அகு) மனோகரமாகிய, (பாந்பு) படுக்கையை, (காவிம்சிதிந்) சித்தம் செய்தேன்; (அந்துந்) அதில், (ரமியிம்புக) (என்னுடைய மனமென்னும் மாதுடன் நீ) கூடிக் குலாவாமல், (நந்நுந்) என்னை, (ரச்ச சேஸெதவு) தொந்தரவு செய்கிறாய்; (ராமா)....! (திக்கு) எனக்குக் கதி, (நீவு அநி) நீயே என்று, (நேநு) நான், (திநதிநமுநு) அநுதினமும், (நம்முந்) நம்புகையில், (எக்குவ தக்குவலு) ஏற்றத் தாழ்வுகளை, (அந்துந்) அதற்குள், (எநஸெடு) கணக்கிடுகிற (கவனிக்கிற), (குணம்) குணம், (ஏமோ) என்னவோ? (ராமா)..; (ராகேந்துமுக) பூர்ண சந்திரனைப் போன்ற முகமுடையவனே, (த்யாகராஜவரத) தியாகராஜனுக்கு வரங்களைக் கொடுப்பவனே, (நீகு ஏ) உனக்கே, (தயபுட்டி) தயை பிறந்து, (நீவு) நீ, (ப்ரோவவலெந்) காப்பாற்றவேண்டும்.

## ஸ்மரணே ஸுக²மு

ராகம்: ஜநரஞ்ஜநி] [தாளம்: தேசாதி

மனித ஜன்மம் எடுத்ததற்கு ராம நாமத்தை நினைப்பதே இன்பமாகும்.

ப. ஸ்மரணே ஸுக²மு ராம நாம
நருடை³ பு³ட்டி நந்து³கு நாம (ஸ்ம)

அ. வரராஜயோக³ நிஷ்டு²லௌ
வாரிகாநந்த³ மந்தே³ ட்டு (ஸ்ம)

ச. ராமநாம ஶ்ரவணமு வல்ல
நாமரூபமே ஹ்ருத³யமு நிண்டி³
ப்ரேம புட்ட ஸேயக³ லேதா³நிஷ்-
காம த்யாக³ ராஜு ஸேயு நாம (ஸ்ம)

### பதவுரை:

(நருடை) மனிதனாய், (புட்டிநந்துகு) பிறந்ததற்கு, (வரராஜயோக) உயர்ந்த ராஜயோகத்தை, (நிஷ்டுலை) அநுஷ்டிக்கும், (வாரிகி) யோகிகளுக்கு, (ஆநந்தமு) ஆனந்தத்தைக் கொடுப்பது அதுவே. (ராமநாம

ஶ்ரவணமு) ராமநாமத்தைக் கேட்பதன்மூலம், (நாம ரூபமே) ராமபிரான் வடிவமே, (ஹ்ருதயமு) உள்ளத்தில், (நிண்டி) நிறைந்து, (ப்ரேமபுட்ட) அன்பை உண்டாக் கும்படி, (ஸேயக லேதா) செய்யவில்லையா? (நிஷ்காம) ஆசைகளை ஒழித்த, (த்யாகராஜுஸேயு) தியாகராஜன் செய்யும், (ராமஸ்மரணே ஸுகமு) ராமஸ்மரணமே சுகத்தை அளிக்கும்.

## ஏல நீ த$^3$யராது$^3$

ராகம்: அடாணு] [தாளம்: ஆதி

இந்தக் கீர்த்தனத்தில் பல்லவி மாத்திரம் தெலுங் கில் அமைந்திருக்கிறது. 'ஏல நீ தயராது-ஏன் உன் தயை எனக்கு வரவில்லை? பராகு ஜேஸேதவேல-உபேக்ஷை செய்ய, இதி ஸமயமுகாது-இது ஸமயமல்ல' என்று மனமிரங்கிக் கூறுகிறார்.

இதிலே அநுபல்லவி சரணங்களில் ஸ்ரீராமபிரானின் ஸ்வரூபம், குணங்கள் முதலிய யாவற்றையும் 'ஸுஜந பரிபால', 'ராஜீவநேத்ர' போன்ற வடமொழிச் சேர்க் கைப் பதங்களால் வருணித்து, ''ராரா'' (வா, அப்பா) என்கிற ஒரே வார்த்தையை உபயோகப்படுத்தி உருக்க மாக அழைக்கிறார். இந்த வடமொழிப் பதங்களுக்கு முதலில் கொடுத்திருக்கும் கீர்த்தனங்களிலிருந்தே பொருள் விளங்கும். ஆயினும் இவைகளுக்குப் பதவுரை கீழே கொடுத்திருக்கிறேன்:

ப. ஏல நீ த$^3$யராது$^3$? பராகு
ஜேஸேத$^3$வேல? ஸமயமுகா$^3$து$^3$ (ஏ)

அ. பா$^3$ல! கநகமயசேல! ஸுஜநபரி-
பால! ஸ்ரீரமாலோல! வித்$^4$ருத ஶர-
ஜால! ஶுப$^4$த$^3$! கருணாலவால! க$^4$ந-
நீல! நவ்யவநமாலிகாப$^3$ரண! (ஏ)

ச. 1. ராரா தே$^3$வாதி$^3$தே$^3$வ! ராரா மஹாநுபா$^4$வ!
ராரா ராஜீவநேத்ர! ரகு$^4$வர புத்ர!
ஸாரதரஸுதா$^4$பூரஹ்ருத$^3$ய பரி-
வார ஜலதி$^4$க$^3$ம்பீ$^4$ர! த$^3$நுஜஸம்-
ஹார! த$^3$ஶரதகுமார! பு$^3$த$^4$ஜநவி-
ஹார! ஸகலஶ்ருதிஸார! நாது$^3$பை (ஏ)

2. ராஜாதி⁴ராஜ! முநி-பூஜிதபாத³! ரவி-
ராஜலோசந! ஶரண்ய! அதிலாவண்ய!
ராஜத⁴ரநுத! விராஜதுரக³! ஸுர-
ராஜவந்தி³த - பாதா³ஜஜநக! தி³ந-
ராஜகோடி ஸமதேஜ! த³நுஜக³ஜ-
ராஜநிசய - ம்ருக³ராஜ! ஜலஜமுக! (ஏ)

3. யாக³ரக்ஷண! பரமபா⁴க³வதார்சித!
யோகீ³ந்த்³ரஸுஹ்ருத்³பா⁴வித! ஆத்³யந்தரஹித!
நாக³ஶயந! வரநாக³வரத³! புந்நாக³ஸுமத⁴ர!
ஸதா³க⁴மோசந! ஸதா³க³திஜ-த்⁴ருதபதா³க
[மாந்தசர!
ராக ரஹித! ஸ்ரீத்யாக³ராஜநுத! (ஏ)

பதவுரை:

(நீ தய ஏலராது) உன் தயை ஏன் வரவில்லை? (பராகு ஜேஸேதவேல) உபேக்ஷை செய்ய, (ஸமயமு காது) இது சமயமல்ல; (பால) பாலனே! (கநகமயசேல) பொன் மயமான வஸ்திரமணிந்தவனே! ஸுஜநபரிபால, நல்லோர்களைக் காப்பவனே! (ஸ்ரீரமா லோல) ஸ்ரீலக்ஷ்மி தேவியிடத்தில் ஆஸக்தி உடையவனே! (வித்ருத ஶரஜால) தரிக்கப்பட்ட பாண சமுதாயங்களையுடையவனே, (ஶுபத) சுபத்தைக் கொடுப்பவனே! (கருணாலவால) கருணைக்குப் பாத்தி போன்றவனே! (கநநீல) மேகத்தைப்போல் நீல சரீரமுடையவனே! (நவ்யவந மாலிகாபரண) புதிய துளசி மாலையை ஆபரணமாக உடையவனே! (தேவாதிதேவ) தேவதேவனே! (ரார) வா, அப்பா; (மஹாநுபாவ ரார)....; (ராஜீவநேத்ர) தாமரை மலர்போன்ற கண்களையுடையவனே! (ரார)..; (ரகுவரபுத்ர) ரகுவம்ச சிரேஷ்டனை தசரதனுடைய புத்திரனே! (ரார)..; (ஸாரதரஸுதா பூரஹ்ருதய பரிவார) அமுதினுமினிய மனத்தையுடைய பரிவாரங்களையுடையவனே! (ஜலதி கம்பீர) சமுத்திரத்தைப்போல் கம்பீரமானவனே! (தநுஜ ஸம்ஹார) அரக்கர்களைக் கொன்றவனே! (தஶரத குமார) தஶரதனுடைய குமாரனே! (புதஜநவிஹார) பண்டிதர்களுடன் பொழுதுபோக்குபவனே, (ஸகல ஶ்ருதிஸார) வேதங்கட்கெல்லாம் ஸாரமானவனே, (நாதுபை) என்பேரில்,....

(ராஜாதிராஜ) அரசர்க்கெல்லாம் அரசனே, (முநி பூஜிதபாத) ரிஷிகளால் பூஜிக்கப்பட்ட பாதங்களையுடையவனே, (ரவிராஜலோசந) சூரியசந்திரர்களைக் கண்களாக உடையவனே! (சரண்ய) சரண்யத்திற்குத் தகுந்தவனே, (அதிலாவண்ய) அதிக சரீர காந்தியுடையவனே, (ராஜ தரநுத) சந்திரனை முடியில் தரித்த சிவனால், (வணங்கப் பட்டவனே! (விராஜதுரக) பக்ஷிராஜனை வாஹனமாயுள்ளவனே, (ஸுரராஜ வந்திதபத) தேவராஜனான இந்திரனால் வணங்கப்பட்ட பாதங்களையுடையவனே! (அஜஜநக) நான்முகனைப் பெற்றவனே! (திநராஜகோடி ஸமதேஜ) கோடி சூரியர்கட்குச் சமானமான தேஜஸையுடையவனே! (தநுஜகஜராஜநிசய ம்ருகராஜ) இராக்கதர்களென்கிற யானைக் கூட்டத்திற்குச் சிங்கம் போன்றவனே! (ஜலஜமுக) தாமரை மலர் போன்ற முகமுடையவனே!

(யாகரக்ஷண) யாகத்தைக் காத்தவனே! (பரம பாகவதார்சித) பரம பாகவதர்களால் பூஜிக்கப்பட்டவனே! (யோகீந்த்ர ஸுஹ்ருத்பாவித) யோகிகளுடைய நல்ல மனத்தினால் தியானிக்கப்பட்டவனே! (ஆத்யந்தரஹித) முதலும் முடிவுமில்லாதவனே! (நாகஶயந) ஆதிசேஷன் மேல் பள்ளிகொள்பவனே! (வரநாகவரத) கஜேந்திரனுக்கு வரத்தைக் கொடுத்தவனே! (புந்நாக ஸுமதர) புன்னைப் பூவைச் சூடியவனே! (ஸதாக மோசந) எப்பொழுதும் பாவத்தைப் போக்கடிப்போனே! (ஸதாகதிஜ-த்ருதபத) வாயுவின் குமாரனாகிய ஆஞ்சனேயனால் பிடிக்கப்பட்ட பாதங்களையுடையவனே! (ஆகமாந்த சர) வேதாந்தங்களிற் சஞ்சரிப்போனே!

(ராகரஹித) சுக துக்கங்கள் இல்லாதவனே! (ஸ்ரீ த்யாகராஜநுத)......

இந்த அர்த்தத்தை உணர்ந்து சரணங்கள் யாவற்றையும் கேட்டால் அத்தியந்த ஆனந்தத்தைக் கொடுக்கும்.

## நநு பாலிம்ப நட³சி

ராகம்: மோஹநம்] [தாளம்: ஆதி

ஸ்ரீராமபிரானது தரிசனம் கிடைத்து அநுபவித்துப் பாடின கீர்த்தனம்.

ப. நநு பாலிம்ப நட³சி வச்சிதிவோ
நா ப்ராணநாத² (நநு)

அ. வநஜநயந மோமுநு ஜூசுடஜீ
வநமநி நெநருநாமநஸு மர்மமு தெ³லிஸி (நநு)

ச. ஸுரபதி நீலமணிநிப⁴ தநுவுதோ
உரமுந முத்யபு ஸருல சயமுதோ
கரமுந ஶரகோத³ண்ட³ காந்திதோ
த⁴ரணீ தநயதோ; த்யா³ராஜார்ச்சித (நநு)

### பதவுரை:

(நா ப்ராண நாத) என் பிராண நாதனே, (வநஜ நயந) தாமரைக் கண்ணனே, (மோமுநு ஜூட) உன் முகத்தைப் பார்க்கவே, (ஜீவனமநி) புருஷோர்த்தம் என்று. (நீ மநஸு மர்மமு) என் மனத்தின் மர்மத்தை, (தெலுஸி) தெரிந்து, (நநு பாலிம்ப) என்னைக் காப்பாற்ற, (நடசி ஒச்சிதிவோ) நடந்தே வந்தாயோ? (த்யாக ராஜார்ச்சித) தியாகராஜனால் பூஜிக்கப்பட்டவனே! (ஸுர பதி) தேவதேவ, (நீலமணி நிபதநுவுதோ) நீலமணி காந்தியுள்ள தேகத்துடன், (உரமு) மார்பில், (முத்யபு ஸருல சயமுதோ) முத்தாஹாரம் ஜ்வலிக்க, (கரமுந) கையில், (ஶரகோதண்ட காந்திதோ) கோதண்டத்தின் பிரகாசத்துடனும், (தரணீதநயதோ) பூமிதேவியின் மகளான ஸீதையுடனும், (நநுபாலிம்ப)......

## ராக³ரத்நமாலிகசே

ராகம்: ரீதிகௌள³] [தாளம்: ரூபகம்

ப. ராக³ ரத்நமாலிகசே ரஞ்ஜில்லு நடஹரிஶ்த (ராக³)

அ. பா⁴க³ ஸேவிஞ்சிஸகல-பா⁴க்³ய மொந்து³தா³மு
ராரே (ராக³)

ச. நைக³மஷட்ஶாஸ்த்ரபுராணகு⁴மார்த² ஸஹிதமட
யோகி³வருலு ஆநந்த³ மு—நொந்தெ³டுஸந்
மார்க³மட
பா⁴க³வதோ³த்தமலுகூ³டி³-பாடே³ கீர்த்தநமுலட
த்யாக³ராஜு கடதேர-தாரகமநிஜேஸிநஶத (ராக³)

பதவுரை:

(ஹரி) ஸ்ரீ ஹரி, (ஶதராக ரத்நமாலிகசேந்) அநேக இராகங்களென்கிற இரத்தின மாலையோடு, (ரம்ஜில்லு நட) விளங்குபவனும்; (பாக) நன்ருய், (ஸேவிம்சி) தரிசனம் செய்து, (ஸகல பாக்யமு) எல்லா பாக்கியங்களையும், (ஒந்துதாமு) அடைவோம், (ராரே) வருவீர்; (நைகம) வேத சம்பந்தமாகிய, (ஷட் ஶாஸ்த்ர) ஆறு சாஸ்திரங்கள், (புராண) புராணங்கள், (ஆகம) பாஞ்சராத்ராதி ஆகமங்கள், (அர்த) அர்த்தத்துடன், (ஸஹிதமு அட) கூடிக்கொண்டிருக்கின்றனவாம்; (ஆநந்தமுநு) ஆனந்தத்தை, (ஒந்தெடு) அடைகிற, (ஸன்மார்கமட) நல்ல வழியாம்; (பாகவதோத்தமுலு) பாகவதோத்தமர்கள் ஒன்று கூடி, (பாடே) பாடுகின்ற, (கீர்த்தநமுலட) கீர்த்தனங்கள், (த்யாகராஜு) தியாகராஜன், (கடதேரந்) க்ருதார்த்தனுவதற்கு, (தாரகமுஅந) ஸம்ஸார ஸாகரத்தைக் கடக்கத் தக்கதாய், (சேஸுந) செய்த (ஹரி.... விளங்குபவன்).

## கி³ரிபை நெல

ராகம்: ஶஹாந] [தாளம்: தேஶாதி

பரிவாரங்கள் போட்டி போட்டுக்கொண்டு புஷ்ப விசிறிகளால் விசிறிப் பணிவிடை செய்ய, ஸ்ரீ ராமபிரானைக் குன்றின்மேல் குறி தவருமல் கண்டேன். என் தேகம் மயிர்க்கூச்செடுத்தது. கண்ணில் நீர் ததும்பி மனத்தில் தோன்றிய வார்த்தைகளைச் சொல்ல முடியாமல் தவித்தேன். பத்துத் தினங்களில் காப்பாற்றுவதாக அவர் வாக்களித்தார்.

ப. கி³ரிபை நெலகொந்ந ராமுநி-கு³றிதப்பககம்³டி (கி³).

அ. பரிவாருலு விரி ஸுரடுலசேநில
ப³டி³விஸருசு கொஸருசு ஸேவிம்பக³ (கி³).

ச. புலகாங்கி³துடை³யாநந்தா³ஶ்ரு
வுலநிம்புசு மாடலாட³ வலெநநி
கலுவரிம்சகநி பதி³ பூடலமை
கா³செத³நநு த்யாக³ராஜ விநுதுநி (கி³).

பதவுரை:

(கிரிபை) குன்றின்மேல், (நெலகொந்ந ராமுநி) வீற்றிருந்த இராமபிரானை, (பரிவாருலு) பரிவாரங்கள், (விரிஸுரடுலசேநில) புஷ்ப விசிறிகளால் விசிற, (குறி

தப்பக) குறி தப்பாமல், (கம்டி) பார்த்தேன், (புலகா.. நிம்புசு) ஆனந்தத்தால் கண்ணீர் வடித்து, (மாடலாட வலெநறி) பேசமுடியாமல் போய், (கலுவவிச்சு) கலவரம் அடைந்த என்னை, (கநி) பார்த்து, (பதிபூடலந்) பத்து நாட்களில், (காசதநன்) காப்பாற்றுவேன் (த்யாக ராஜ விநுதுநி) தியாகராஜனை (என்றார்).

## ஸீதா கல்யாண வைபோ⁴க³மே

ராகம்: சங்கராபரணம்] [தாளம்: கண்டலகுவு

ஒரு கல்யாணத்தின் விசேஷம் என்னவென்றால், தம்பதிகள் சந்தோஷமாக நீண்ட மணவாழ்வை அநுபவிக்க வேண்டுமென்பதுதான். இதற்கு அவசியமானது மணமகனின் குணாதிசயமும் கருணையுமே. ஸீதா கல்யாணத்தின் வைபவம், ஸ்ரீராமபிரானின் ஸௌந்தர்யம்-பராக்ரமம்-கருணைதான். இந்தக் கருத்தையே இந்தக் கீர்த்தனத்தில் ஸ்வாமிகள் தெரிவிக்கிறார்.

ப. ஸீதாகல்யாண வைபோ⁴க³மே
(ராமகல்யாண வைபோ⁴க³மே)

ச. 1. பவநஜ ஸ்துதிபாத்ர பாவநசரித்ர
ரவிஸோம வரநேத்ர ரமணீயகா³த்ர

2. ப⁴க்தஜந பரிபால ப⁴ரித ஶரஜால
பு⁴க்தி முக்தித³ லீல பூ⁴தே³வபால

3. பாமராஸுர பீ⁴ம பரிபூர்ணகாம
ஶ்யாம ஜகத³பி⁴ராம ஸாகேததா⁴ம

4. ஸர்வ லோகாதா⁴ர ஸமரைகவீர
க³ர்வமாநஸதூ³ர கநகாக³தீ⁴ர

5. நிக³மாக³ம விஹார நிருபமஶரீர
நக³த⁴ராக⁴வித³ார நதலோகாதா⁴ர

6. பரமேஶநுதகீ³த ப⁴வஜலதி⁴ போத
தரணிகுல ஸஞ்ஜாத த்யாக³ராஜநுத

### பதவுரை:

(பவநஜ ஸ்துதிபாத்ர) ஹநுமானால் துதிக்கப்பெறுபவன் ஸ்ரீராமன்; (பாவந சரித்ர) புனிதமான நடத்தையுள்ளவன்; (ரவி ஸோம வரநேத்ர) சூரிய சந்திரர்களைக் கண்களாக உடையவன்; (ரமணீய காத்ர) அழகான வடிவுள்ளவன்; (பக்தஜன பரிபால) பக்தஜனங்களைக் காப்பாற்றுபவன்; (பரித ஶரஜால) அதிகமான அம்புகளுள்ள

அம்பருத்துணி உள்ளவன்; (புக்திமுக்தித் லீல) போகம், மோக்ஷம் இரண்டையும் லீலையாக அளிப்பவன்; (பூதேவபால) அந்தணர்களைக் காப்பாற்றுபவன்; (பாமராஸுர பீம) பாமர அஸுரர்களுக்குப் பயத்தை உண்டாக்குபவன்; (பரிபூர்ண காம) விருப்பங்கள் யாவற்றையும் அடைந்தவன்; (ஶ்யாம) நீல வண்ணன்; (ஜகதபிராம) உலகத்திற்கு ஆனந்தம் அளிப்பவன்; (ஸாகேததாம) அயோத்தியில் வசிப்பவன்; (ஸர்வலோகாதார) எல்லா உலகத்திற்கும் ஆதாரமானவன்; (ஸமரைகவீர) போரில் ஒப்பற்ற வீரன்; (கர்வமாநஸ தூர) கர்வமுள்ள மனிதர்களுக்கு எட்டாதவன்; (கநகாக தீர) மேருவை ஒத்த தீரன்; (நிகமாகம விஹார) வேத ஆகமங்களில் விளையாடுபவன்; (நிருபம ஶரீர) நிகரற்ற சரீரத்தையுடையவன்; (நகதர) மலைகளை ஏந்தியவன்; (அகவிதார) பாபத்தைப் போக்குபவன்; (நதலோகாதார) சரணம் அடைபவர்களைக் காப்பாற்றுபவன்; (பரமேஶநுதகீத) பரமேஶ்வரனால் துதிக்கப் பெற்றவன்; (பவஜலதி போத) ஸம்ஸாரக் கடலைத் தாண்ட ஓடம் போன்றவன்; (தரணிகுல ஸஞ்ஜாத) சூரியகுலத்தில் உத்தம ஜன்மம் எடுத்தவன்; (த்யாகராஜநுத) தியாகராஜனால் துதிக்கப்பட்டவன்.

## நாபாலி ஸ்ரீராம

ராகம்: ஶங்கராபரணம்] [தாளம்: ஆதி

தென்னாட்டில் வெகு காலமாக மங்களகரமான காரியங்கள் ஆரம்பிக்கும்பொழுதும், மணப்பெண் நலங்கிடும் பொழுதும், "நாபாலி ஸ்ரீராம பூபாலகஸ்தோம" என்கிற பாட்டைப் பாடுவதைக் கேட்டுக்கொண்டு வருகிறோம். ஆயினும், இது யார் செய்தது, இந்தச் சந்தர்ப்பத்தில் ஏன் பாடுகிறார்கள், இதன் பொருள் என்ன என்று பலருக்குத் தெரியவில்லை. ஆகையால் இதன் உபயோகத்தை இங்கே கொடுத்திருக்கிறேன். தியாகராஜ ஸ்வாமிகள், பகவானை பர்த்தாவாகவும், தம்மை உத்தம பத்தினியாகவும் வைத்து ஸேவை செய்து 'உத்ஸவங்களைப் பாட ஆசையுள்ளவன்' என்று 'ப³லஹம்ஸா' ராகத்தில் 'ராம ஸீதா' என்ற கீர்த்தனையில் பாடியிருக்கிறார். அப்படிச் செய்த உத்ஸவ கீர்த்தனையில், 'நா பாலி' என்ற கீர்த்தனையும் ஒன்று. இதில் ராமபிரானைப் பலவிதமாகத் துதித்து அவர் பாதங்களை நலங்கிடக் கொடுக்குமாறு பிரார்த்திக்கிறார்.

ப. நாபாலி ஸ்ரீராம பூ4பாலகஸ்தோம
காபாட3 ஸமயமு நீ பாத3மு வீரா (நா)

ச. 1. ப4ளிப4ளி ப4க்துலபூஜாப2லமு நீவநு கொம்டி
நளினலோசந நீகு நலுகு3 பெட்டத3நுரா (நா)

2. கோடி மந்மது2லந ஸாடிகா நீ ஸொகஸு
நாடி யுந்நதி3 மதிநிமேடி ஸ்ரீராம (நா)

3. தொலி பூஜாப2லமேமோ க3லிகே3நீபத3ஸேவ
நலுவகைநநு நிந்நு தெலியக3தரமா (நா)

4. பதிதபாவந நீவு பாலிஞ்ச குண்டே3நு
க3தி மாகெவ்வரு மம்மு க்ரக்குந ப்ரோவு (நா)

5. கோரி நீபத3ஸேவ ஸாரேகு ஸேயநு தலசி
மா ரமண நாலோநே மருலு கொந்நநு (நா)

6. நிருபேத3 கப்3பி3நநிதி4 ரீதி தொரி3கிதிவி
வரத்யாக3 ராஜநுத வரத3ம்ரொக்கேத3ரா (நா)

## பொழிப்புரை:

என்னை ரக்ஷிக்கும் ஸ்ரீராமா (பூபாலா), என்னைக் காப்பாற்றும் ஸமயம் இது. ஏ தாமரைக் கண்ணனே! (நீகு நலுகுபெட்டேதநுரா) உனக்கு நலங்கிட, (நீ பாதமுவீரா) உன் பாதத்தைக் கொடு. கோடி மன்மதனுடைய அழகுள்ளவனே! நீ எனக்குக் கிடைத்தது என் பூஜாபலன்தான். நீ என்னைக் காப்பாற்றுவிட்டால், வேறு யார் எனக்குக் கதி? உனக்குப் பாத ஸேவை செய்யவே நீ எனக்குக் கிடைத்திருக்கிறாய். பணம் இல்லாத ஏழைக்கு ஒரு புதையல் கிடைத்ததுபோல் நீ எனக்குக் கிடைத்திருக்கிறாய்.

[ஒரு பக்தனுக்கும் ராமபிரானுக்கும் எவ்வளவு பொருத்தமோ, அவ்வளவு மணப்பெண்ணுக்கும் பர்த்தாவுக்கும் பொருத்தம் என்பதைக் காண்கிறோம்.]

## ப4ஜரே ரகு4வீரம்

[தாளம்: ஆதி

ராகம்: கல்யாணி]

ப. ப4ஜ ரே ரகு4வீரம் ஸர-
ப4ரித த3ஸரத2குமாரம் (ப4)

ச. 1. நீவு து3ராஸல ரோஸி பர-
நிந்த3ல நேல்லநு பா3ஸி (ப4)

2. பஞ்சேந்த்3ரியமுல நணசு
ப்ரபஞ்சஸுக2மு விஸமநுசு (ப4)

3. அந்நியு பநிகோதி³கெ³நா இடு-
அடுதிரிகி³ந தெலிஸேநா (ப⁴)
4. வேரேபநுலரு போ³க கோ³முக²
வ்யாக்⁴ரமு சந்த³முகா³க (ப⁴)
5. தப்புதண்டலநு மாநி ப⁴வ-
தரணமுநநா மதிபூநி (ப⁴)
6. கர்மமு ஹரிகி நொஸங்கி³-
ஸத்கார்யமுலந்நு பொங்கி (ப⁴)
7. ப³க்திமார்க³முநு தெலிஸி நிஜ-
பா⁴க³வதுல ஜத க³லஸி (ப⁴)
8. மாயாரஹிதுநி கொ³லிசி நீ
மநஸுந ராமுநி த³லசி (ப⁴)
9. காமாது³ல நேகி³ஞ்சி நீ
கார்யமுலநு ஸாதி³ஞ்சி (ப⁴)
10. ராஜா³தி⁴புகா³ வெலஸி
த்யாக³ராஜ வரது³ட³நி தெலிஸி (ப⁴)

## பொழிப்புரை:

சரத்தைத் தரித்திருக்கும் தசரத குமாரனை, ரகு வீரனைப் பஜனம் செய்; துராசைகளை விடு; பிறரை நிந்திக்காதே! இந்திரிய சுகங்களையெல்லாம் தள்ளிவிடு. பயனற்ற காரியங்களில் ஈடுபடாதே! பசுத்தோல் போர்த்த புலியைப்போல் பிறரை ஏமாற்ற வேஷம் போடாதே! தப்பு தண்டா காரியங்களை விட்டுவிட்டு, ஸம்ஸாரத்தைத் தாண்டுவதில் புத்தியை வை. கர்மங்களையெல்லாம் ஹரிக்கு அர்ப்பணம் செய். ஸத்காரியங்கள் செய்வதில் சந்தோஷம் அடை. பாகவத கோஷ்டியில் சேர்ந்து பக்தி மார்க்கத்தை அறிந்துகொள். மாயாரஹிதனை ஸ்ரீராமனை மனத்தில் வைத்திடு. காமங்களை ஒழித்து லக்ஷ்யத்தைச் சாதித்துக்கொள்.

## மங்களம்

### நீ நாம ரூபமுலகு

ஸ்ரீ ராமபிரானைப் பாதாதி கேசம் வரை வர்ணித்துப் பாடும் மங்களம் இது. இதைப் பாடும்போது கர்ப்பூர ஆரத்தி செய்து, கீர்த்தனைகள் கேட்பவர்கள் எல்லோரும் எழுந்திருந்து, சப்தமில்லாமல் தியானத்துடன் பிரார்த்திக்கவேண்டும். மங்களத்தை முழுவதும் பாடிக் கேட்டு முடிக்கவேண்டும்.

நீ நாம ரூபமுலகு நித்ய ஜய மங்க³ளம் (நீ)
1. பவமாந ஸுது³டு³ப³ட்டு பாதா³ரவிந்த³முலகு (நீ)
2. நவமுக்தா ஹாரமுலு நடியுஞ்சு யுரமுநகு (நீ)
3. நளிநாரிகே³ரு சிரு நவ்வுக³ல மோமுநகு (நீ)
4. பங்கஜாக்ஷி நெலகொந்ந அங்க³யுர முநகு (நீ)
5. ப்ரஹ்லாத³ நாரதா³தி³ ப⁴க்துலு பொக³டு³ஸும்டு³ (நீ)
6. ராஜீவ நயந! த்யாக³ ராஜவிநுதமைந— (நீ)

பதவுரை:

(நீ நாமரூபமுலகு நித்ய ஜய மங்களம்) உன் திவ்ய நாமங்களுக்கு எப்பொழுதும் மங்களம் விளங்கட்டும்-(பவமாந ஸுதுடுபட்டு) வாயு புத்திரனை ஹநுமான் தாங்கும், (பாதாரவிந்தமுலகு) பாதாரவிந்தங்களுக்கு; (நவமுக்தாஹாரமுலு) ஆணிமுத்து ஹாரங்கள், (நடியுஞ்சு உரமுநகு) அசைந்து ஆடும் மார்பிற்கு; (நளிநாரி கேரு சிரு நவ்வுகல மோமுநகு) சந்திரனை யொத்துப் புன்சிரிப்புள்ள முகத்துக்கு; (பங்கஜா நெல கொந்ந) தாமரைக் கண்ணையுடைய லக்ஷ்மி வசிக்கும், (அங்கயுரமுநகு) இரு துடைகளுக்கும்; (ப்ரஹ்லாத நாரதாதி பக்துலு) ப்ரஹ்லாதர், நாரதர் முதலிய பக்தர்கள், (பொகடுத்ஸும்டே) துதிக்கும், (ராஜீவ நயன) செந்தாமரைக் கண்ணனே; (த்யாகராஜவிநுதமைந) தியாகராஜனால் புகழப்பட்ட............

## ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் உபதேசங்கள்

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் தம் கீர்த்தனங்களில் பகவானைத் துதிப்பது தவிரப் பலவித உபதேசங்களை 'ஓ-மநஸா' என்று தம் மனத்திற்குச் சொல்வதுபோல் பொது ஜனங்களுக்குச் செய்கிறார். ஸ்வாமிகளின் கீர்த்தனங்களில் ஸங்கீத ரஸ ஸமுத்திரத்தில் பல விசேஷமான தத்துவரத்தினங்கள் பதிந்துள்ளன.

இக்கலியுகத்தில் முக்திக்குச் சுலப வழி பக்திதான். 'பக்தி பண்ணிக்கொண்டிருந்தால் முக்தி பெறலாமே' என்று கோபாலகிருஷ்ண பாரதியார் பாடியபடி, பகவானுக்குப் பக்தியுடன் உள்ள ஸங்கீதமே பிரியமென்று தெரிவிக்கிறார். பக்தியில்லாத ஸங்கீதம் ஸன்மார்க்கத்தில் சேர்க்காது. 'ஸங்கீ³த ஜ்ஞானமு ப⁴க்தி விநா ஸந்மார்க³மு க³லதே' என்ற கீர்த்தனையை அடிக்கடி பாடுவ

-தைக் கேட்கிறோம். பகவானைப் போற்றும் கீர்த்தனங்களை எப்படிப் பாடவேண்டுமென்பதை ஸ்ரீரஞ்ஜனி ராகத்தில் 'ஸொகஸுகா மிருதங்க தாளமு' என்று தொடங்கும் கீர்த்தனத்தில் விவரிக்கிறார். ஸொகுஸாய் மிருதங்க தாளத்துடன் ஸ்வரம் தவறாமல் சரியான லயத்துடனும், உபநிஷதங்களிலுள்ள தத்துவங்களை விளக்கும் பதங்களுடனும் திராக்ஷாரஸம், நவ ரஸங்கள் கலந்த கீர்த்தனங்களால் பகவானைப் போற்றி ஆனந்திக்க வேண்டும் என்று தெரிவித்து இப்படிச் செய்யத் தமக்கு முடியுமா என்கிறார் (த்யாகராஜநி தரமா).

பல வருஷங்கள் கீர்த்தனங்களைப் பாடிப் பஜனைகள் செய்து பரவசமடைந்த பிறகு தம் கீர்த்தனங்களில் இருக்கும் பலன்களை 'ஸங்கீத ஶாஸ்த்ர ஜ்ஞாநமு' என்கிற முகாரி ராக கீர்த்தனத்தில் விவரிக்கிறார். "தியாகராஜனது ஸங்கீதம் ஶ்ருங்கார ரஸங்கள் நிறைந்த ராமகதைகளாகிய கருணாஸமுத்ரம்; இது ஸாரூப்யம், ப்ரியம், பக்தி, ஸத்ஸங்கம், தெய்வ கடாக்ஷம், நியமம், நிஷ்டை, யஶஸ், தநம் முதலியவைகளை அளிக்கும்'' என்கிறார்:

''ப்ரேம ப[4]க்தி ஸுஜநவாத்ஸல்யமு
ஸ்ரீமத்ரமாவா கடாக்ஷமு
நேமநிஷ்ட யஶோத[4]நமொஸங்கு[3]நே
நேர்புகல்கு[3] த்யாக[3]ராஜு நேர்ச்சிந.''

முக்தியில் நோக்கமுள்ள பக்தன் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று பல கீர்த்தனங்கள் பாடியிருக்கிறார். மகாத்மா காந்தி அடிகளுக்கு மிகவும் பிரியமான 'வைஷ்ணவ ஜநதோ' என்கிற குஜராத்திப் பாட்டின் தாத்பார்யங்களை இந்தக் கீர்த்தனங்களில் காணலாம்.

'அதடே[3] த[4]ந்யுடு[3]' (அவனே தன்யன்) என்கிற காபி ராக கீர்த்தனத்தில் அவர் சொல்வது: ''அவன் ஸ்ரீராம பிரானின் பாத கமலங்களில் இடைவிடாது தியானம் செய்வான். ஸத்ஸங்கங்களில் சேர்ந்து ஆடிப் பாடித் தன் கஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் ஆனந்தங் கொள்வான். மனிதனை உள்ளிருந்து பாதிக்கும் ஆறு வித சத்துருக்களை ஜயித்துப் பகவானிடம் பூர்ண நம்பிக்கை வைப்பான். தாரக நாமத்தின் ஸத்வ பாவத்தை நன்கு உணர்ந்து, ஆசாபாசங்களை ஒதுக்கிப் பொய் வேஷம் போடாமல் இருப்பான்.

# கீர்த்தனங்களின்

# முதற்குறிப்பு அகராதி

473